ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றும்

திங்கள் தோறும் வெளிவருவது

சிலம்பு உ. } மெய்கண்டான் ஆண்டு-எாக ஐப்பசித் திங்கள 1924ஆம் அக்டோபர்—நவம்பர்மீ { பரல் ம.

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே

திருச்சிற்றம்பலம்

---

## தமிழ் ஞான சம்பந்தர்

நமது திருஞான சம்பந்தப் பெருமான் சுமார்த்தமத ஆசாரியராகிய ஸ்ரீ சங்கராச்சாரியரால் 'திராவிட சிசு' என்று அழைக்கப்படுகின்றார். நமது பெருமான் தமது திருப்பதிகங்களின் திருக்கடைக்காப்பில் தமிழ்ஞான சம்பந்தன் என்று தம்மைக் கூறும் பகுதிகளை முதற்கண் காட்டுவோம்.

## 'தமிழ்' என்பதோடு தமது திருப்பெயரை இணைத்துக்

| கூறும்பெயர் | தலப்பெயர் |
|---|---|

### முதல் திருமுறை

| | |
|---|---|
| 'தலமல்கிய புனற்காழியுட்டமிழ் ஞான சம்பந்தன்' | திருநெய்த்தானம் |
| 'நன்றார் தருபுகலித் தமிழ்ஞான மிகு பந்தன்' | திருநின்றியூர் |
| 'நகரிறை தமிழ் விரகன்' | திருவீழிமிழலை, திருச்சிவபுரம், |
| 'தமிழின் விரகன்' | திருப்புறவம் [திருமறைக்காடு |
| 'தமிழ் ஞான சம்பந்தன்' | ஸ்ரீ புகலி, திருப்பனையூர் |
| 'நற்றமிழ் ஞானசம்பந்தன்' | திருவேட்களம், திருவாள்குடி திருப்பாச்சிலாச்சிராமம், திருக் |
| 'அந்தமிழ் ஞானசம்பந்தன்' | சீகாழி [குற்றாலம் |
| 'தமிழ் ஞான சம்பந்தன்' | திருச்செங்காட்டங்குடி, திருநல்லம் |
| 'நற்றமிழ்க்கின்றுணைஞானசம்பந்தன்' | திரு இலம்பையங் கோட்டூர் |
| 'தமிழ் ஞான சம்பந்தன்' | திருவாரூர், திருக்கொடி மாடச் செங்குன்றூர், திருப்பாதாளீச்சரம் |
| 'நற்றமிழ்வல்ல ஞான சம்பந்தன்' | திருவல்லம் |
| 'தமிழ் விரகன்' | திருவலிவலம், திருவீழிமிழலை, திரு |
| 'தமிழ் கெழு விரகினன்' | திருவிடைமருதூர் [க்கழுமலம் |
| 'தமிழ்ஞான சம்பந்தன்' | திருமுதுகுன்றம், திருவேகம்பம் |

### இரண்டாந் திருமுறை

| | |
|---|---|
| 'தமிழ் ஞானசம்பந்தன்' | திருவனேகதங்காம்பதம், திருவே |
| 'தமிழ்க்கிழமை ஞானன்' | திருப்புறம்பயம் [கம்பம் |
| 'தமிழ்ஞான சம்பந்தன்' | திருக்கைச்சினம், திருவெண்காடு, |
| 'தமிழார் விரகன்' | திருக்குடகு [திருவிடைமருதூர் |
| 'செந்தமிழான் சம்பந்தன்' | திருமயிலாப்பூர் |
| 'நற்றமிழ் ஞான சம்பந்தன்' | திருப்பெரும்புலியூர், திருவாழ் |
| 'செந்தமிழின் ஞானசம்பந்தன்' | திருநல்லூர் [கொளிபுத்தூர் |
| 'தமிழ் விரகன்' | திருச்சக்கரமாற்று |
| 'தமிழ்ஞான சம்பந்தன்' | திரு அகத்தியான் பள்ளி |
| 'நல்ல செந்தமிழ் வல்லவன் ஞான சம்பந்தன்' | திருத்தேவூர் |

| | |
|---|---|
| ‘கற்று முற்றினர் தொழுங் கழுமலத் தருந்தமிழ், சுற்றுமுற்றுமாயினன் அவன் பகர்ந்த சொற்களால்’ | திருத்துருத்தி |
| ‘தமிழ் ஞானசம்பந்தன்’ | திருக்கடல் நாகைக் காரோணம், திருத்திலதைப்பதி |

## மூன்றாந் திருமுறை

| | |
|---|---|
| ‘முத்தமிழ்நான்மறைஞானசம்பந்தன்’ | திருப்பூந்தராய் |
| ‘தமிழ்ஞான சம்பந்தன்’ | திருப்புனவாயில் |
| ‘நாடவல்ல தமிழ்ஞானசம்பந்தன்’ | திருவிற்கோலம் திருந்துதேவன் குடி |
| ‘அருந்தமிழ் ஞானசம்பந்தன்’ | திருக்கழுமலம் |
| ‘செந்தமிழ் ஞான சம்பந்தன்’ | திருச்சக்கரப்பள்ளி |
| ‘தமிழ் நாதன் ஞானசம்பந்தன்’ | திருவாலவாய் |
| ‘நல்லவாயவின் தமிழ் நவிலு ஞானசம்பந்தன்’ | திருச்சிற்றேமம் |
| ‘சந்தமார் தமிழ் கேட்டமெய்ஞ் ஞான சம்பந்தன்’ | திருவாலவாய் |
| ‘சந்தையாற்றமிழ்ஞான சம்பந்தன்’ | நமச்சிவாயத்திருப்பதிகம் |
| ‘தமிழ்ஞான சம்பந்தன்’ | திருவொற்றியூர், சாத்தமங்கை, திருக்கச்சி நெறிக்காரைக்காடு, குடமூக்கு, திருவக்கரை, திருவேட்டகுடி |
| ‘செந்தமிழான்மிகுஞான சம்பந்தன்’ | திருப்பனந்தாள் |
| ‘தமிழ் விரகன்’ | திருப்பிரமபுரம் |
| ‘சந்தமொடு செந்தமிழிசைந்த புகலிப்பந்தன்’ | ஸ்ரீ கயிலாயம் |
| ‘பாரின்மலி நின்ற புகழ்நின்ற தமிழ்ஞான சம்பந்தன்’ | திருச்சண்பைநகர் |
| ‘சந்த நிறை தண்டமிழ் தெரிந் துணருஞான சம்பந்தன்’ | திருமாணிகுழி |
| ‘நாடிய தமிழ்க் கிளவியின்னிசை செய் ஞான சம்பந்தன்’ | திருக்கோகரணம் |
| ‘தமிழ் ஞான சம்பந்தன்’ | திருநல்லூர், திருநாரையூர், திருவலம்புரம், திருப்பருதிநியமம் |
| ‘முத்தமிழ் விரகன்’ | திருவாலவாயில் |
| ‘தமிழாகரன்’ | சீகாழி |
| ‘தமிழ் ஞானசம்பந்தன்’ | திருப்பந்தணை நல்லூர் |
| ‘ஞானசம்பந்தன்சொல்லியநற்றமிழ்’ | சீகாழி |

ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளும் 'நற்றமிழ் வல்ல ஞான சம்பந்தன்' என்று நமது பெருமானைச் சிறப்பித்தார். மேலுந் தம்முடைய திருப்பதிகங்களைத் திருநெறிய தமிழென்றும், 'தமிழ்மாலை' (திருமுதுகுன்றம்) என்றும், 'தமிழ் பத்தும்' (திருவீழிமிழலை) என்றும், 'துளங்கில் தமிழ்'(திருவியலூர்) என்றும், 'நலங்கொள் தமிழ்' (திருக்கொடுங்குன்றம்) என்றும், 'குன்றாத் தமிழ் குறைவின்றி நின்றபொருளே' (திருநின்றியூர்) என்றும், 'இசைமலிதமிழ்' (மறைக்காடு) என்றும்,'தண்டமிழ்' (திருப்பாச்சிலாச்சிரமம்) என்றும், 'ஞாலமிக்க தண்டமிழ்'(திருச்சோபுரம்) என்றும், 'சீர்மிகுத்த தமிழ்' (திருத்தோணிபுரம்) என்றும், 'மறையிலங்கு தமிழ்' (திருச்செங்காட்டங்குடி)என்றும், 'முடிவின்றமிழ்' (திருவாலவாய்) என்றும், 'பாரினார் தமிழ்' (திருவேகம்பம்) என்றும், 'செந்தமிழ்த்தடங்கடல்' (திருத்தருமபுரம்) என்றும், 'ஊறுமின் தமிழால் சொன்ன' (சிதம்பரம்) என்றும், 'செந்தண்டமிழ்' (திருஇரும்பூளை) என்றும், 'கலைமலிதமிழ்' (திருவிடைமருதூர்) என்றும் நமது பெருமான் கூறுகின்றார்.

இனி நமது பெருமான் தம்மை 'மறைஞான சம்பந்தன்' என்று கூறும் பகுதிகளைத் தொகுத்துக் காட்டுவாம்.

## முதற்றிருமுறை

| | |
|---|---|
| 'நான்மறை ஞானசம்பந்தன்' | ஸ்ரீ புகலியும், திருவீழிமிழலையும் |
| 'பூசுரன் ஞானசம்பந்தன்' | திருநள்ளாறும், திருவாலவாயும் |
| 'கவுணியன் ஞானசம்பந்தன்' | திருஆவூர்ப் பசுபதீச்சரம் |
| 'மறை ஞான சம்பந்தன்' | திருமுதுகுன்றம் |
| 'கவுணி, ஞாலத்துயர் சம்பந்தன்' | திருக்கொடுங்குன்றம் |
| 'அந்தணர் காழியுளணி ஞானசம்பந்தன்' | திரு இடும்பாவனம் |
| 'நான்மறை நாவினற்றமிழ் ஞான சம்பந்தன்' | திருவாள்கொளிபுத்தூர் |
| 'நாமலிந்தோங்கு நான்மறை ஞான சம்பந்தன் செந்தமிழ் வல்லார்' | திருப்பாம்புரம் |
| 'தழல்கெரி மூன்றோம்பு தொழிற்றமிழ்ஞான சம்பந்தன்' | திருமுதுகுன்றம் |

| | |
|---|---|
| 'மறைகள்வல்லவணிகொள்சம்பந்தன்' | திருச்சிரபுரம் |
| 'நண்ணிய நூலன் ஞானசம்பந்தன்' | திருவெங்குரு |
| 'நான்மறை நாவன் றமிழ்கின் றுணை ஞான சம்பந்தன்' | திரு இலம்பையங்கோட்டூர் |
| 'மறைசேர்வருங்கலைஞானசம்பந்தன்' | திருக்கழுமலம் |
| 'திருமாமறை ஞானசம்பந்தன்' | திரு அம்பர்மாகாளம் |
| 'செழுமறைகள் பயிலுநாவன் பன்னியசீர் மிகுஞான சம்பந்தன்' | திருவீழிமிழலை |
| 'அருமறை ஞான சம்பந்தன்' | திருச்சிரபுரம் |
| 'மன்னியசீர் மறைநாவன் வளர் ஞான சம்பந்தன்' | திருவையாறு |

## இரண்டாந் திருமுறை

| | |
|---|---|
| 'மறைஞான சம்பந்தன் செந்தமிழ்' | திருவாஞ்சியம் |
| 'மறைஞான சம்பந்தன்' | திருக்கழிப்பாலை |
| 'மெய்ஞ்ஞானப்பூசுரனுரைத்ததமிழ்' | திருவையாறு |
| 'கவுனியன் சம்பந்தன்.' | திருப்புள்ளிருக்கும் வேளூர் |
| 'நாலுமறையோர்நாலூர்மயானத்து' | நாலூர் மயானம் |
| 'நான்மறை ஞான சம்பந்தன்' | திருப்புறவார் |
| 'நல்லவருமறையான் றமிழ் ஞான சம்பந்தன்' | திருவிடைமருதூர் |
| 'மறைவளரும் தமிழ்மாலை' | திரும்பெரும்புலியூர் |
| 'நான்மறையான் ஞானசம்பந்தன்' | திருப்பிரமபுரம் |
| 'மறைஞான சம்பந்தன் | திரு அறையணி நல்லூர் |
| 'மறைஞான ஞான முனிவன்' | கோளறுபதிகம் |
| 'அருமறை ஞானசம்பந்தன்' | திருக்கொச்சைவயம் |
| 'வேதியன்ஞான சம்பந்தன்' | திருவலஞ்சுழி |
| 'கவுணியன் செழுமறை நிறை நாவன், அரவெனும்பணி வல்லவன்ஞான சம்பந்தன்' | திருமாந்துறை |

## மூன்றாந் திருமுறை

| | |
|---|---|
| 'நான்மறைவல்லஞான சம்பந்தன்' | சிதம்பரம் திருக்கழிப்பாலை |
| 'அருமறை ஞான சம்பந்தன்' | திருப்பைஞ்ஞீலி, திருப்பூவணம், திருக்கழிப்பாலை |
| 'மறைஞான சம்பந்தன்' | திருக்கடவூர்த்திருவீரட்டம் |

| | |
|---|---|
| ‘நற்றமிழ் ஞான சம்பந்தனுன் மறை கற்றவன்’ | திருப்பஞ்சாக்கரம் |
| ‘நான்மறைவல ஞானசம்பந்தன்’ | திருக்காளத்தி |
| ‘மறைஞான சம்பந்தன்’ | திருமயிலாடுதுறை, திருப்பெருவே [ளூர் |
| ‘எண்ணமர் பல்கலையானிசை ஞான சம்பந்தன்’ | திருவெண்டுறை |
| ‘வேதிய ரதிபதி மிகுதலை தமிழ் கெழுவிரகினன்’ | திருப்புறவம் |
| ‘அருமறை ஞான சம்பந்தன்’ | திருவிளமர், திருத்துருத்தியும், திருவேள்விக்குடியும் |
| ‘மறைஞான சம்பந்தன்’ | திக்கொச்சைவயம், திருவடகுரங் [காடு துறை |
| ‘மாமறை நான்கினோடங்கமாறும் வல்லவன்வாய்மையி,ஞமருகேள்வி நலந்திகழு ஞானசம்பந்தன்’ | திருத்தோணிபுரம் |
| ‘மறையோன் றூமொழி ஞான சம்பந்தன்’ | திருவீழிமிழலை |

மறை ஞான சம்பந்த னென்றும், தமிழ் ஞான சம்பந்த னென்றும் போந்த அடைமொழிகள் யாவற்றுள்ளும் வடமொழி ஞான சம்பந்தன் என்னுங் கருத்துள்ள சொற்பகுதிகள் யாண்டுங் காணப்படவில்லை. மறைஞான சம்பந்த னென்றும் தமிழ் ஞான சம்பந்தனென்றும் கூறிய பெருமான் தம்மை வடமொழி ஞானசம்பந்தன் ஆரிய ஞானசமபந்தன் என்று யாண்டுங் கூறக் கண்டிலம். மறை என்பது நுண்ணிய உண்மைப் பொருளையும் மந்திரங்களையும் குறிக்கும். ‘மறைவளரும் தமிழ் மாலை’ ‘மறையிலங்குதமிழ்’ ‘மறைமலி தமிழ் விரகன்’ என்றமையால் அஃது உணரப்படும். நான் மறை என்ற சொற்றொடர் தற்காலத்திலே வடமொழியிலுள்ள நான்கு வேதங்களைக் குறிக்க வழங்கி வரினும் ஆதியில் பண்டைத் தமிழில் இருந்து மறைந்த நான் மறைகளைக் குறிப்பதாக ஆராய்ச்சியால் விளங்குகிறது. வடநூலையே அச்சொற்றொடர் குறிப்பதாகக் கொள்வார் அவ்வடநூலுள் போந்த சைவப் பகுதிகளையே நமதாசிரியர் தழுவிக் கொண்டதாகக் கருதற்பாலர். ‘குன்றாத் தமிழ்’ என்றும், ‘சீரின் மிகுதமிழ்’ என்றும், ‘பாரினார் தமிழ்’ என்றும், ‘மிகுதலை தமிழ்’ என்றும், ‘செந்தண்டமிழ்’ என்றும் தமிழ் மொழியை

விதந்தோதிய வண்ணம் ஆரிய நான்மறைகளைக் கூறிற்றிலர் என்பது காண்க. மேலும் தமக்கு அமைத்த அடைமொழி களுள் தமிழ் ஞான சம்பந்தன் என்னுங் கருத்துடைய அடைமொழிகளே மிகப்பல, மற்றவை மிகக் குறை. தென்னாடுடைய சிவனடி வணங்கும் வேதியர்க்குத் தாம் அதிபதியாயிருந்தமையால் வடமறையாளர் போற்றும் காயத்திரியை யாண்டும் விதந்தோதாது, தமிழ் அருள்நூல்களின் தலைமறை மொழியாகிய ஐந்தெழுத்தினையே வேதத்திலே உள்ள உண்மைக் கருத்தென்று அறுதியிட்டனர். 'தமிழ் நாதன்' என்று தன்னை உணர்த்திய வண்ணமே தமிழிலேயே தமது திருவருட்பாடல்கள் யாவற்றையும் அமைத்தருளினர். இக்கருத்துப் பற்றியே எழுந்தது முதற்கட் கூறிய ஸ்ரீ சங்கராச்சாரியார் வாக்கென்றுணர்க. வடமொழி வேதத் தலைவராகிய வியாசரை யாதல் சைவ நெறியில் ஒழுகாத ஆரிய முனிவரை யாதல் தாமது திருப்பாடல்களில் யாண்டுங் குறித்திலர். 'மறையோர்கள் ஏத்தும் புண்ணியன' என்று குறித்த இடங்களில் சிவநெறி யொழுகும் மறையோரே கூறப்பட்டார் என்று உணர்க. மனு முதலிய அறநூல்களிற கூறும் வருணாசிரம வொழுக்கங்களைப் பற்றி யாதொன்றும் நமது ஆசிரியர் தேவாரத்திற் கேட்கப்படவில்லை செந்தமிழ்க் கலை தெரிந்தவர் பொருந்திய தேவூர் என்றும், செந்தமிழோர் பரவியேத்தும் சீர்கெழு செங்காட்டங்குடி யென்றும், தமிழ்ப் பெரியாரைப் பலவிடத்தும் விதந்தோதினமை காண்க.

முத்தழல் ஓம்புதல் தேவாரத்துள் குறிக்கப் பட்டுள்ளது. ஆரியரான் மாத்திரமல்லாமல் பண்டைத் தமிழ் நாட்டிலே குன்றில் வாழ்ந்த தமிழ் முனிவராலும் அவ்வழிபாடு நிகழ்ந்தமை தெளிவாதலால் அஃது ஆரியர்க்கே உரிய வடநாட்டு வழிபாட்டு முறை யென்று கொள்ளுதற்கு இடமில்லை. மேலும் ஊன்பயில்கின்ற வேள்வியை நமதாசிரியர் யாண்டுங் குறித்திலர். 'வேத வேள்வி' என்றதனால் ஊன் பயில் வேள்வி என்றதற்கிடமில்லை. அங்கி வழிபாடு வேதத்தில் மிக்குக் கூறுதலால் அதனை அவ்வாறு ஓதினர். 'பாகவேட் டெரியோம்பும்' என்ற இடத்

தில் பசு போதத்தை யொழித்து என்று பொருள் கொள்வதே பொருத்தமென்க. என்னை? தற்பயன் கருதாது உலக நன்மைக் காகக் கேடிலா வேள்விசெய் அந்தணர் பசு போதத்தோடு செய் யும் தொழில் பயனிலதாய் முடியுமாகலான் நெய்யும் சமிதை யும் கொண்டு செய்யும் வேள்வியே தேவாரத்துள் விதந்தோதப் பட்டது. பண்டைத் தமிழ் நான்மறையினும் அஃதோர் வழி பாடாகக் கூறப்பட்டிருத்தல் கூடும். வேதம் என்ற சொல்லும் பண்டைத் தமிழ் நான்மறைக்கும் பரியாயப் பெயராகத் தேவார காலத்திலே வழங்கி வந்தது. அது திருநான்மறை விளக்கத்துட் காண்க.

'ஊனொடுண்டல் நன்றெனாத் ஊனொடுண்டல் தீதென ஆன அன்பர் பேசநின்ற தன்மையான்' (திருவானைக்கா-திருமுறை 3) என்ற வண்ணம் ஊன்பயிலாது சிவபெருமானை நெருப்பு வாயிலாக வழிபடும் பண்டைத் தமிழ் முனிவர் நெறியைப் பின்பற்றி யொழுகும் அந்தணரது வேள்வியே வேத வேள்வி யென்று விதந்தோதப் பட்டதும் தெளிக. தமிழர்க்கும் ஆரி யர்க்கும் பொதுவாகிய அங்கி வழிபாட்டினையே சிறப்பாக வேதியர்கள் கைக்கொண்ட போதிலும் அதனினும் சிறந்த வடிவ வழிபாட்டின் பெருமையினையே நமதாசிரியர் தேவார முழுவதி லும் முழக்கஞ் செய்தருளியுள்ளார். சிறுபான்மையே அழ லோம்புதலைக் குறித்துள்ளார். அஃது அடுத்த இதழில் தெளி வாக விளக்கப் பெறும். தாம் கைக்கொண்டதும் தமிழ்ப் பெருஞ் சைவ வழிபாடாகிய ஆலயந் தொழுதலே யென்பது தெளிவு. தமது செயலாலும், சொல்லாலும் தமிழர் வழிபாட்டினையே வற்புறுத்தி யருளியமையாலும் தமிழ் ஞானசம்பந்தன் என்னுந் திருப்பெயர் கொண்டுள்ளார் போலும்

(தொடரும்)

கா. சுப்பிரமணிய பிள்ளை, எம். ஏ., எம் எல்.,

---

# பொய்கையார்

(௩௬௬-ம் பக்கத் தொடர்ச்சி)

யாப்பருங்கல விருத்தியிலிருந்து இறுதியில் எடுத்துக்காட்டிய இதனையே பொய்கையார் ஒருவரே யென்னும் தம் கொள்கைக்கு வலியுடைய ஆதரவாக ஐயங்காரவர்கள் குறித்துள்ளார்கள். ஒரு பழைய உரையை மேற்கோளாகக் கொள்ளுங்கால் கொள்ளுகின்ற நெறியில் அவ்வுரை கூறுவனவெல்லாம் உடன்பாடாதல் வேண்டுமென்னும் நெறிப்பாடில்லை. ஐயங்காரவர்கள் எழுதிய மதிப்புவாய்ந்த அரிய பல ஆராயச்சி யுரைகளில் எத்தனையோ பல தொல்லை யுரையாசிரியர்களின் கருத்துக்கள் மறுக்கப்பட்டிருக்கின்றன. பழைய உரைகளிலிருந்து இலக்கிய இலக்கணப் பொருள்கட்கு நாம் மேற்கோள் கொள்ளும் அளவுதானும் சரித்திரக் கூறுகட்குக் கொள்ளலமையாதென்பது தெளிவு. எனவே யாப்பருங்கல விருத்தி பொய்கையார் ஒருவரே யெனக் கருதிக் கூறுவதாயினும் அதுகொண்டே ஒருவரெனச் சாதித்தல் அமையாதென்பது நம் கருத்து.

இனி அவ்விருத்தியுரைதான் களவழி பாடிய பொய்கையாரும், பொய்கையாழ்வாரும் ஒருவரெனக் கூறும் கருத்துடையதா என்று பார்ப்போம். அவ்வுரையில் களவழிப்பாட்டு உதாரணமாகக் காட்டப்படவில்லை. சில தனிப்பாட்டுக்களும், முதற்றிருவந்தாதிச் செய்யுளிரண்டும் காட்டப்பட்டுள. அவற்றுள்ளும் ஆரிடத்திற்கு உதாரணமானவை தனிப்பாக்களே; அந்தாதிச் செய்யுட்களல்ல. இவற்றிலிருந்து அத்தனிப்பாக்களை யருளியவர் ஓர் முனிவராவரெனல் அவ்வுரையாளரின் கருத்தென்பது போதருமேயன்றி வேறில்லை. களவழி பாடிய பொய்கையார் முனிவரல்ல ரென்பதே அவ்வுரையாளர் கருத்தென்று துணிதற்கும் இடனுண்டு. அவர், "ஏரியிரண்டும்" "உடையராய்ச் சென்றக்கால்" "கண்டகம் பற்றி" என்னும் மூன்று வெண்பாக்களை யெடுத்துக் காட்டி, "என்றித் தொடக்கத்துப் பெருஞ்சித்திரனார் செய்யுளும், ஔவையார் செய்யுளும், பத்தி

னிச் செய்யுளும் முதலாக வுடையன வெல்லாம் எப்பாற் படு மெனின் ஆரிடப்போலி யென்றும் ஆரிடவாசக மென்றும் வழங் கப்படு மென்க. இவைகளெல்லாம் இருடிகளல்லா வேனையோ ராகி மனத்ததுபாடவும், ஆகவும் கெடவும் பாடவும் வல்ல கபிலர், பரணர், கல்லாடர், மாமூலர், பெருந்தலைச் சாத்தர் இத்தொடக் கத்தோரானும், பெருஞ்சித்திரர் தொடக்கத்தோரானும் ஆரிடச் செய்யுட்போல மிகவும் குறையவும் பாடப்படுவன எனக் கொள்க.'' என்று கூறியிருக்கின்றனர். அவர் இங்ஙனம் சங்கப் புலவரிற் சிறந்தார் சிலரை யெடுத்துக்காட்டி அன்னாரது பெரு மையினை யொத்துக்கொண்டும், அவர்களை 'இருடிகளல்லா ஏனை யோர்' என்றும், அவர்கள் பாட்டினை 'ஆரிடப்போலி' என்றும் கூறுதலானே, களவழிபாடிய பொய்கையார் முதலிய ஏனைச் சங் கப் புலவர்களும் அன்னரென்றுதல், அவரினும் பெருமை குறைந் தோரென்றுதல் அவர் கருதினாரவ ரென்பதே பொருத்தம்.

இனி, பொய்கையாழ்வாரை அவர் முனிவரென்று கருதினா ரென்பதற்கும் ஆதாரவொன்றுமில்லை. தனிப்பாட்டுக்களைப் பொய்கையார் வாக்கு என்று கூறியவர் அங்ஙனமே முதற்றிரு வந்தாதிப் பாட்டினையும் பொய்கையார் வாக்கு என்று கூறியது இவரும் பொய்கையார் என்னும் பெயரினர் என்பது குறிப் பிடவே யென்னில் இழுக்கென்னுளது? அவர், முன்னர் 57-ம் சூத்திரவுரையில் "அரிமலராய்ந்த கண்" "பாலன்றனதுரு வாய்" "எளிதிலிரண்டடியும்" என்னும் வெண்பாக்களை யெடுத்துக்காட்டிய விடத்து, அந்தாதிச் செய்யுளாகிய பின்னி ரண்டையும் விடுத்து "அரிமலராய்ந்த கண் என்பது பொய்கை யார் வாக்கு" என்று குறித்திருப்பது, தனிச்செய்யுளியற்றினா ரும் வேறு, அந்தாதி பாடினாரும் வேறு என அவர் கருதினா ரென்று கோடற்குச் சார்பாயுள்ளது. இவ்வாற்றால் களவழி பாடிய பொய்கையரும் வேறு, முதற்றிருவந்தாதி பாடிய பொய் கையாழ்வாரும் வேறு, தனிச்செய்யுட்கள் பாடிய பொய்கை முனிவரும் வேறு எனல் பெறப்படுமாறறிக. தனிச் செய்யு ளியற்றினாரைக் குறித்த வேறு செய்தியாவது, அச்செய்யுட் களின் தோற்றம், பொருட்பெற்றி யென்பனவாவது நாம் அறி

யுமாறில்லை. ஒரோவழிப் பொய்கையாழ்வாரே பொய்கை முனிவரென முடிவு செய்யப்படினும் களவழிபாடிய பொய்கையார் இவரின் வேறுவரென்பதே தேற்றம்.

இனி, இன்னிலை யென்னும் அரிய நூலினை உரையெழுதி வெளிப்படுத்துதவிய திருவாளர், V. O. சிதம்பரம் பிள்ளையவர்கள் அந்நூலாசிரியரின் வரலாறு கூறுமிடத்தே, இன்னிலையியற்றினார் பொய்கையார் என்னும் பெயரினரென்றும், அவர் பொய்கையாழ்வாரே யென்றும், களவழி பாடிய பொய்கையார் அவரின் வேறுவரென்றும் முடிவு செய்திருக்கின்றார்கள். இன்னிலையியற்றினார் பெயர் பொய்கையாரென்பது துணிந்தபின்னரே அவரும் ஆழ்வாரும் ஒருவரோ அல்லரோ என்பது ஆராய்ச்சிக்குரியது. அவர் பெயர் பொய்கையாரென்பதற்கு அவர்கள் காட்டும் ஆதரவு ஓர் ஏட்டுப் பிரதியினிறுதியில் "பொய்கையார் பாடிய இன்னிலை முற்றிற்று" என எழுதப்பட்டுள தென்பதே. அது கொண்டு அங்ஙனம் துணிதற்குப் பின்வருவன தடையாதலை யோர்ந்துணர்க. தொல்காப்பியச் செய்யுளியல் 113-ம் சூத்திரவுரையில் பேராசிரியரும், நச்சினார்க்கினியரும் "திரைத் தவிரிக்கில்" என்னும் இன்னிலைச் செய்யுளை யெடுத்துக் காட்டி, "இது பூதத்தாரவையடக்கு" என்று குறித்துள்ளார்கள். யாப்பருங்கல விருத்தியுடையாரும் 93-ம் சூத்திர வுரையிலே ஓரிடத்து எடுத்துக்காட்டிய மூன்று செய்யுட்களில் ஒன்று * இன்னிலைச் செய்யுளாகவும், அவர் "என்றித் தொடக்கத்துப்

* இச்செய்யுள், இன்னிலைப் பதிப்பிலே

"உடைமையறு தீட்ட லுறுதுணையாம் யாண்டு
முடைமையராச் சென்றக்கா லூரெல்லாஞ் சுற்ற
முடைமைக்கோ லின்றங்குச் சென்றக்காற் சுற்ற
முடையவரும் வேறுபடும்" என்றும்,

யாப்பருங்கல விருத்திப் புத்தகத்திலே

"உடையராய்ச் சென்றக்கா லூரெல்லாஞ் சுற்ற
முடைவராய்க் கோலூன்றிச் சென்றக்காற்—சுற்ற
முடைவயிறும் வேறுபடும்" என்றும்

பெரிதும் வேறுபட்டுக் காணப்படுகின்றது.

பெருஞ்சித்திரனார் செய்யுளும் ஔவையார் செய்யுளும், பத்தினிச் செய்யுளும் முதலாகவுடையன" என்றே கூறிச்சென்றனர். இவற்றிலிருந்து இன்னிலை பலராற் பாடப்பட்ட தொகை நூல் என்பதே பெறப்படுகின்றது. இன்னிலை யேட்டுப் பிரதியின் தொடக்கத்தில் "மதுரையாசிரியரால் தொகுக்கப்பட்ட இன்னிலை நாற்பத்தைந்து" என எழுதியிருப்பதாகப் பிள்ளையவர்கள் குறித்திருப்பதும் அந்நூல் பொய்கையாரொருவராலே இயற்றப்பட்ட தன்றென்பதனையே வலியுறுத்தாநிற்கும். இன்னிலை யாக்கியோரைப் பற்றி மேலும் ஆராய்ந்து உண்மை கண்டுளோ ரிருப்பின் அவர்கள் அதனை வெளியிடுதல் நலம்.

இது காறுஞ் செய்த இவ்வாராய்ச்சியாற் போந்த பொருள் சங்கப் புலவராகிய பொய்கையாரும், பொய்கை யாழ்வாரும் ஒருவரே யெனக் கோடல் பொருந்துவதாகா தென்பதே.

பண்டிதர், மு. வேங்கடசாமி நாட்டார்.

---

## "ஓர் உருத்திராக்கமணி"

(தன் சரிதத்தைத் தானே சொல்லிக்கொள்ளுதல்)

இமய மலைச் சாரலில், நேபாள தேசத்தில் நான் பிறந்தேன். வளர்ந்து பழுத்து முற்றச் சிவந்த பொன்னிற மணியாயினேன். நேபாள நில மன்னர் அரசவை நண்ணினேன். உருத்திராக்கப் பண்டசாலையை யடைந்தேன். என் உற்றாருடன் கூடினேன். நான் பதின்மூன்று முகங்களோடு பொலிந்தமையால், தனியே அதிக முகமணிகள் அமர்ந்திருந்த இடத்தில் எனக்கும் ஓரிடம் கிடைத்தது. அவ்விடத்தில் வெகு சௌக்கியமாக வாழ்ந்துகொண் டிருந்தேன். ஒரு நாள் காலையில் அரசவைக்கு உயர்முக மணிகளாகிய நாங்க ளனைவரும் அரசர் கோமானைக் கண்டுகொள்ளப் போயிருந்தோம். இப்பூவுலகின்கண்ணே மக்கள் அனைவருக்கும் உருத்திராக்கங்கள் அளிப்பது அவர்

நாடொன்றேயாகும். அவருக்கு உருத்திராக்கத் திருவுடை மன்னர் எனும் பெயரும் பெரியோர்களால் வழங்கப்பட்டிருக்கின்றது. அடியவர் குழாத்தினருக்கு அவர் எப்பொழுதும் தருமமாக உருத்திராக்கங்கள் அளிப்பார் நாங்கள் அவரைக் கண்டுகொள்ளப் போயிருந்த நாளில், பல அடியவர்கள் உருத்திராக்கம் பெறுதற்காக அவண் வந்து குழுமியிருந்தனர். அவ்வடியவர் குழாத்தினருள் சிவ நேசம் பழுத்த தவநேசராகிய பற்றற்ற துறவி யொருவர், நீறு பொலியும் நெற்றியும் கருணை பொழியும் முகமும் சிவநாமம் நவிலும் நாவும் உடையோராய் மிளிர்ந்து கொண்டிருந்தார். அரசர் கோமான் அடியவர் அனைவருக்கும் உருத்திராக்கங்கள் உதவிய பின்னர், அடியேனை அன்போடு தன்னுடைய திருக்கரத்தாலெடுத்து, அத்தவநேசரைநோக்கி, "அண்ணால்! இவ்வருமை சான்ற மணியினைத் தங்களுக்குத் தருவதோடு, எனது உழுவலன்பினையும் உவப்புடன் ஈகின்றேன்." என்று இனிமைசான்ற மொழிகள் பல கூறி என்னை அவர்பால் ஒப்புவித்தார். நற்றவமாமணியும் அரசர் நன்மணிக்கு இன்சொன்மணிகள் பல ஈந்து, பொன்மணியாகிய என்னைப் பெற்று இன்புற்று, மென்மைசால் கயிற்றில் கோத்துக் கழுத்தில் அணிந்து கொண்டு, அரசர்பால் விடைபெற்று ஏகினார். அன்னார் கழுத்தில் பொலியும் பேறு பெற்றதுபற்றி எளியேன் பெருமகிழ்வு எய்தினேன். ஏனெனில், அவருடைய தூய வாழ்வின் இன்பத்தை நானும் நுகரும் பேறு பெற்றேன். நான் பெற்றது யார் பெறுகிற்பார்? அவர் எப்பொழுதும் இனிய தேவார திருவாசகங்களை ஓதிக்கொண்டே யிருப்பார். அவ் இன்பவோசையை நான் செவிமடுத்துக்கொண்டே அம்மெல்லிய கயிற்றூசலில் உறங்குவேன். அவர் நீராடும் பொழுது நானும் நீராடுவேன். அவர் யாண்டுச் சென்றாலும் அடியேனும் அவரோடு கூடவே செல்வேன். அவர் கழுத்தை விட்டு நான் ஒரு நாளும் பிரிவதில்லை. நாங்கள் இருவரும் தீர்த்தங்கள் ஆடித் திருத்தலங்கள் பலபணிந்தபின்னர், மாபெருந்தலமாகிய காசிமாநகரை நண்ணினோம். கங்கைநீரிற் குடைந்தோம். காசிவிசுவநாதர் விசாலாக்ஷி கழலடி பணிந்தோம். பின்னர் சாதுக்

கள் மடம் ஒன்றினைச் சார்ந்தோம். ஆங்கு கிடைத்த உணவினை அடிகள் அருந்தினார். பின்னர், வெளித்திண்ணையில், துணியை விரித்துக் கரத்தைத் தலையணையாக வைத்துக்கொண்டு சிறிது அயர்ந்து உறங்கினார். நன்றாக உறங்கும்பொழுது, முழுத் திருட்டுப் பரதேசி ஒருவன் அங்கு வந்து சேர்ந்தான். மெதுவாகத் தன் மடியிலிருந்த கத்தியை யெடுத்துக் கயிற்றை நறுக்கிவிட்டு, என்னைக் கழற்றி எடுத்துக்கொண்டான். பாவி, பெரியாரிடமிருந்து என்னைப் பிரித்துவிட்டான். அதுமுதல் நான் மற்றொரு பெரியாரை அடையும் வரையில் பட்டபாடு கொஞ்சமல்ல. அந்தப் பரதேசி எப்பொழுதும் நல்ல செங்காவித் துணி உடுத்தியிருப்பான். உடம்பில் ஒரு உழக்கு விபூதியும், ஒரு கூடை உருத்திராக்க மணிகளும் அணிந்திருப்பான் அப்பாவி. உருத்திராக்கங்கள் அவனை அடைந்ததன் பயனாக, உலகில் உருத்திராக்கங்களுக்கு இருந்த மதிப்பும் பாதி போய்விட்டது. இப்போலி வேடத்துடன் அவன் பொது ஜனங்கள் கூடும் இடங்களுக் கெல்லாம் சென்று, நல்லவன்போலிருந்து, மெல்ல அயலார் உறங்கும்பொழுது அவர்களுடைய நகைகளைக் கழற்றிக் கொண்டும், முடிச்சுக்களை அவிழ்த்துக்கொண்டும் காணாமற் சென்று விடுவான். இவ்வாறு திருடும் பொருள்களை ஒன்று காலாகக் காசுக்கடையில் விற்றுக் கஞ்சா வாங்கிக் குடிப்பான். அபின் வாங்கித் தின்பான். கள்ளுக்கடையில் அடகுவைத்துக் கள்ளுக் குடிப்பான். கெட்ட போக்கிலி! அவனுக்குக் கஞ்சாவிலே தான் அளவுகடந்த பிரியம். உடுத்தியிருக்கும் துணியைக்கூட அடகுவைத்துக் கஞ்சாக் குடிப்பான். இதனால் அவனுக்குக் கஞ்சாபிமானியென்ற மற்றொரு பெயரும் உண்டு. அக்கஞ்சாபிமானியை யடைந்தது முதல் என் நிலைமை பெரிதும் கெட்டுப் போய்விட்டது. ஒரு நாளாவது தேவாரம் திருவாசகம் கேட்க முடியவில்லை. திருக்கோயிலுக்குப் போக வியலவில்லை. அடியவர்களைக் கண்டு இன்புற முடியவில்லை. எல்லாம் வஞ்சனைப் பேச்சுக்களும், வசை மொழிகளும், அஞ்சாத திருட்டுச் செயல்களும், கஞ்சாக்கடைகளும், கள்ளுக்கடைகளும் கடைகெட்ட போர்வழிகளின் கூட்டுறவுமாகவே யிருந்தன. அந்த ஆர்ப்பாட்

டத்தைக் கண்டு என்னெஞ்சு பொறுக்க முடியவில்லை; பெரிதும் பதறிக்கொண்டேயிருந்தது. ஒரு நாள் அக்கஞ்சாபிமானி, தன் கையில் ஒன்றுமின்மையால், வெகு கோபமாகக் கழுத்திலிருந்த கயிற்றை அறுத்து, என்னையிழுத்துக் கஞ்சாக் கடைக்காரனிடத்தில் அடகுவைத்துக், கஞ்சாவை வாங்கிக் குடித்துவிட்டு, ஆடிப்பாடிக்கொண்டு போய்விட்டான். "தொலைந்தான் சனியன்! தப்பித்தேம்; பிழைத்தேம்." என்று நான் கஞ்சாக் கடைக்காரன் பெட்டியிலேயே சில நாட்கள் இருந்தேன். "காசிக்குப் போயுங் கருமந் தொலையவில்லை" எனும் முதுமொழி எனக்குத்தான் மிகவும் பொருத்தமுடையது. கஞ்சாபிமானியை விட்டுப் பிரிந்தாலும், கஞ்சாவை விட்டுப் பிரியுங்காலம் இன்னும் வரவில்லை. கஞ்சா அபின் நாற்றம் எப்பொழுதும் என் குடலை உருவிக்கொண்டேயிருந்தது. "எப்போழுதடா இதை விட்டுப் போவோம்." என்று மயங்கிக்கொண்டிருந்தேன். ஒரு நாள் அக்கடைக்கு ஒரு பைராகி கஞ்சா வாங்குவதற்கு வந்து சேர்ந்தான். கஞ்சாக் கடைக்காரன் என்னை அவனிடத்தில் எடுத்துக் காட்டினான். அவன் ஒரு ரூபாய் கொடுத்து என்னைப் பெற்றுக்கொண்டான். கஞ்சாவும் வாங்கிக்கொண்டு புறப்பட்டான். இன்னும் என் தலையிலெழுத்து, கஞ்சாபிமானியை விட்டுக், கஞ்சாக் கடையைவிட்டு அகன்றாலும் மற்றொரு கஞ்சாபிமானி வந்து என்னைத் தொடர்ந்து கொண்டான். முற்பிறப்பில் கஞ்சாவுக்கும் எனக்கும் ஏதேனும் தொடர்பு இருந்திருக்குமோ? என்னவோ? தெரியவில்லை! அப்பைராகி என்னை ஒரு கயிற்றில் கோத்துக் கழுத்திலே கட்டிக்கொண்டான். அவன் ஒரு பெரிய அழுக்குப் பேர்வழி. ஒரு ஆண்டிற்கு ஒரு முறைதான் குளிப்பான். வெயர்வை நாற்றம் பொறுக்கமுடியாது. அவன் உடம்பிலும் சட்டை துணிமணிகளிலும் ஒரு வண்டி அழுக்கு இருக்கும்! சிவசிவா! சொல்லமுடியாது துன்பம்! கஞ்சாபிமானியும் பைராகியும் குளிக்கிற பேர்வழிகளல்லர்—குடிக்கிற பேர்வழிகளாதலால், நான் காசியில் கங்கையில் பெரியவரோடு குளித்தது தான். பின்னர் குளிக்கவே யில்லை. பைராகியை யடைந்தது பெருந்துன்பமாகப் போய்விட்டது. ஒருநாள் கயா விலிருந்து பைராகி

இராமேச்சுரம் யாத்திரைக்குப் புறப்பட்டான். நானும் அவனு ன்ட கூடவே ரயிலில் பிரயாணஞ் செய்துகொண்டுவந்தேன். சென்னைவரையில் பெரிய வண்டியாகையால், பிரயாணம் மிகச் சுகமாக இருந்தது. சென்னை வந்து சேர்ந்து, எழும்பூரில் குறு கிய வண்டியில்ஏறினோம். சொல்லமுடியாது துன்பம்! இயம லோகத்திக்குப் போகாததுதான் பாக்கி!! புளிமூட்டை அமைந் ததுபோல்,ஜனங்கள் ஒருவரை யொருவர் நெருக்கிக்கொண்டு, நின்று கொண்டிருந்தார்கள். எட்போட இடமில்லை! ஒரு பக்கம், காச்சுமூச்சு என்று இரைச்சல் பொறுக்கமுடியவில்லை! ஒரு புறம் சுருட்டு பீடி கஞ்சாப்புகை வீச்சம் சகிக்கமுடியவில்லை! பண்டுதான் எனக்கும் கஞ்சாவுக்கும் பகையுண்டோ? என் னவோ? தெரியவில்லை! நான் அறிய அதற்கு ஒரு வஞ்சனையும் செய்ததில்லை. ஆனால் அதுமட்டும் என்னை விடமாட்டேன் என்று சுற்றிக்கொண்டேயிருக்கிறது. மழை வேறு தூற ஆரம் பித்து விட்டது! ஜனங்கள் கதவுகளையெல்லாம் அடைத்துவிட் டார்கள். வெளிச்சமுமில்லை! காற்றுமில்லை! கஞ்சாப்புகை, சுருட்டுப் புகையுடன் கலந்து விளையாடுகிறது! கருவாட்டு நாற் றமும் கலந்து கூத்தாடுகிறது! மற்றொன்று மறந்துவிட்டேன். மூட்டைப்பூச்சி ஒரு பக்கம், அதிகமாக என் வண்டியில் ஏன் ஏறினீர்களென ஒவ்வொருவரையும் இழுத்துப் பிடுங்குகிறது. பத்தாததற்குச் சீட்டுப் பரிசோதகர் வேறு செங்கல்பட்டி லிருந்து ஏறிக்கொண்டு கஸ்புஸ் என்கிறார். எஸ். ஐ. ஆர். வண்டியில் பிரயாணஞ் செய்வதைக் காட்டிலும், நடந்து செல் வது நாளானாலும் மிக நல்லது. பெருந்துன்பத்தோடு இராமேச் சுரம் போய்ச் சேர்ந்தோம். கடலாடினோம். கடவுளைக் கண்டு களித்தோம். பின்னர் ஒரு புளிய மரத்தடியில் போய் உட் கார்ந்தோம். இன்னும் உன்னை விடமாட்டேன் என்று கஞ்சாப் புகை ஒரே மூச்சாகக் கிளம்பி விட்டது. பைராகி கஞ்சாவை உக்காவில் வைத்து முழுமூச்சாக ஒரு அடி அடித்தான்.

(தொடரும்)

சுந்தரன்.

# தேரையர்

(௬௮-ம் பக்கத் தொடர்ச்சி)

அன்றியும், இவர் செய்தருளிய மருதநுப் பாரதத்தின் சிறப்புப் பாயிரங்களாக,

"மருத்துப் பாரத நாட கமிதுதனை மதித்து
விருத்தப் பாவினுங் கருவினு மிராகமேல் விரிதநுக்
கருத்துக் கேற்றிடச் செய்தனன் 'தேரன்' ஆங்கஞ்சன்
அருத்த மோர்ந்திடிற் சொல்லெலா மவுடதமாமே"

எனவும்;

"இந்த நூலிசைத்த வயித்தியம்
எந்த நூலிலுமில்லை யிஃதொன்றே
செந்தமிழ்த் துறைத்தேர் சிகாமணி
புந்தித் தாமரைப் பொன்னிக ரானதே."

எனவும்;

"ஒழிந்த தேரப் பெருமானும்
உதவியாகப் பண்டி தர்ககிங்
குறுதிமரும நூலுரைதகான்
ஒன்று மினிமே லுரையானே."

எனவும் அவரது காலத்தார்களான பாயிரங் கூறற்குரியார்களாலும் அவரது பேர் தேரன் எனவே கூறப்பட்டிருக்கிறது.

ஆகவே, அவர தியற்கைப் பெயர் 'தேரன்' என்பதே என நிலைநிறுத்தியவாறும்.

ஆதலின் அத் 'தேரன்' என்கிற பேரே பிற்காலத்தாரால் 'தேரையன்' அல்லது 'தேரையர்' என்றழைக்கப்பட் டிருத்தல் வேண்டுமென யூகிக்கற்பாலது.

அத் 'தேரன்' என்னுஞ் சொற்கு இலக்கணங் கூறுமிடத்து;

தேர் + அன் எனப் பிரிக்கப்பட்டுப் பகுதி விகுதிகளால் முடிந்த பகுபதமாய் 'தேரன்' என்னும் பகுதி அவரது தேர்ச்சியை யுணர்த்துவதாய், அன் என்னும் ஆண்பால் விகுதியுடன் சேர்ந்து தேர்ச்சியை யுடையவன் என்னும் பொருள்பட நின்ற தென்றும்.

இத்தேரன் என்னுஞ் சொல் தேரையன் என்று வழங்குவதற்கு இலக்கணம் யாதோ வெனின், அது,

தேர் + ஐ + அன் எனப் பிரிக்கப்பட்டு பகுதி விகுதிகளுடன் சிறப்புப் பொருளைப் பயக்கும் 'ஐ' என்னும் சொல் இடைவிராய், 'தேரையன்' என முடிந்த தென்க.

இது, 'வேலையன்' முதலிய சொற்களாலும் உணரக்கிடக்கின்றது.

இவ்விலக்கண விதியை யுணராதாராய்த் தேரை பகுதியெனக் கொண்டுமயங்கி மண்டூக மஹரிஷி, யெனவும், தேரை எடுத்த காரணத்தால் அவர்க்குத் 'தேரையர்' எனப் பேர் வந்ததெனவும் கூறினர் இனி அம்மயக்க மொழிவாராக.

அவர்கள் இவ்வளவு விளக்கியும் தேரையே பகுதியெனக் கொள்ளின், 'வேலையன்' என்கிற சொல்லில் 'வேலையே' பகுதியெனக் கொள்வார்க் கொப்பாவா ரென்க.

முற்றும்

மா. வடிவேல் முதலியார்,
மருத்துவரும், தமிழ்புலவரும்.

---

# குட்டிக் குறள்

(௩அஉ-ம் பக்கத்தொடர்ச்சி)

## மனைவி

குணநலஞ் செட்டிமை கொண்டவள் மனைவி.
இழிகுண மனைவியே யழிவன மாண்பே.
மனைமாட்சி யுளதே லெனைமாட்சி யிலதே?
கற்புறு மனைவியின் மற்றெது பேறே?
௫௫. நன்மனை மொழியா வின்மழை பொழியும்.
தற்கண வன்சொற் றகைமையள் மனையாள்.
பெண்டிர்தங் காவல் திண்டிற லரணே?
கொழுநனைப் பேணிற் றொழுகுநர் வானோர்.
நல்விளா ளிலையே யில்லையா னடையே.
௬௦. மனைநலம் மனைவி யணிகலன் றனையர்.

## மக்கள்

அறிவுடை மகாஅரிற் பிறிதுபே றில்லை.
நன்மகா ரெழுமையின் றுன்பறுப் பாரே.
அரும்பொருள் தனயர் அவர்பொருள் தமவே.
இளமகா ரளாஅயகூ ழமுதினு மினிது.
௬௫. சீறடி யுடல்மொழி செவியுற வின்பம்.
குழலும் யாழும் மழலைமுன் குழைவ.
தந்தைசெய் நன்றி முந்துறாஉம் வென்றி.
மகார் தமிற் சிறத்தல் மன்பதைக் கினிமை.
சான்றவ னெனமகிழ் வீன்றநாட் பெரிது.
௭௦. மகன்றரு முதவி எவன்கொ லெனுஞ்சொல்.

## அன்பு

அன்பினைக் கணினீ ரளந்தறி விக்கும்.
என்பையு முதவுவ தன்பின தியல்பே.

உடலுயி ரன்பின் றொடர்பது பயனே.
அன்பரு ளார்வம் நண்புசெய் யும்மே.
௭௫. ஈண்டுறு மன்பு ஏனைய பின்பே.
அறச்சார் பன்புமன் மறத்துக்கு மதுவே.
என்பில மான அன்பிலர் தீய்வர்.
அன்பில் வாழ்பாலைக் கண்டளிர்த் தற்று.
அகத்தறு மன்பேற் புறத்துறுப் பெதற்கே.
௮௰. அன்பஃ துயிர்பிற என்புதோ ருடலே.

## விருந்து

இருந்தோம்பும் வாழ்க்கை விருந்தோம்பு தற்கே.
விருந்தஃ தயலா மருந்துமா காதே.
விருந்தோம்பு மில்லம் வருந்துமா றில்லை.
நல்விருந் தில்லிற் செல்விவந் துள்ளாள்.
௮௫. விருந்தோம்பி னிலனில் வருந்தாத பலனே.
விருந்துகாப் போனை விரும்புமால் வானே.
விருந்தி னற்பயனதன் வரம்பினத் துணையே.
வருவிருந் திகழ்ந்தோ ரரும்பொரு ளிழந்தார்.
செல்வத்துள் வறுமை விருந்தேலாச் சிறுமை.
௯௰. நோக்கினே திரியும் பூக்கன விருந்து.

## இன் சொல்

அன்பளைஇ வஞ்சனை யறுவதே இன்சொல்.
அகமகிழ் வீகையின் முகமலர் வினிது.
அலர்முக மினியநோக் ககச்சொல தறமே.
இன்சொலான் றுன்ப வின்மையு ணீங்கும்.
௯௫. இனியவும் பணிவு மணிகலன் பிறவே ?
அறம்மிகு மினியன வாய்ந்துரை செயினே.
நயனன்றி யீனும் பயனீனு மின்சொல்.
சிறுமைதீ ரின்சொல் மறுமையு மினிது.

இன்சொலின் பங்கண் டென்கொலோ வன்சொல்.
௰. கனியொரீஇக் காய்கவர் வினியபே சாமை.

(தொடரும்)

சுகவனம்-சிவப்பிரகாசன்,
காவேரிப்பட்டணம்.

---

# பழந்தமிழ்

(உகூஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

## நகரவீறு

பழந்தமிழில் னகரமில்லாமையால் அதில் நகரவீற்றுச் சொற்களே நடைபெற்றன. பின்னர் ஆரியமும் அந்நடை பெற்றதாகும். அந்நகரவீற்றுச் சொற்களுள் எஞ்சி நின்ற வெந், வெரிந் முதலிய சொற்களை மாத்திரம் அகத்தியனார் கூறினர். தொல்காப்பியர் முதலோரும் அவற்றையே கூறிப் போயினர். வெந்=முதுகு. வெந்—வெநுக=முதுகு (தெலுங்கு). மநம், தநம், கநம், வநம் என நகரவுச்சரிப்பாக எழுதலே பழந் தமிழ் முறையாம். செந்தமிழில் னகரமுண்டாயின பின் மனம், தனம், கனம், வனம் என் றெழுதலாயினர்.

நகர னகரங்களுக்கு முறையே உச்சரிப்பு வேறாயினும் னகரம், லகர நகரங்களாலாய சந்தியெழுத்தாகலின் மனம் தன முதலியவற்றில் நகரத்துக்கு வியாபகமாகின்றது.

“நகரவிறுதியு மதனோரற்றே”

“வெரிநவிறு திமுழுதுங் கெடுவழி
வருமிட னுடைத்தே மெல்லெழுத்தியற்கை”

(தொல்காப்பியம்)

இதனானே அ ஆ இ ஈ உ ஊ (எ ஒ) க ங ச ஞ த ந ப ம ய (ல) வ என்பன பெரும்பாலும் இயற்கை யெழுத்துகளாய் நாவிற் கெளியனவாய் இருக்கின்றமையின்; பழந்தமிழ் நாவிற் கெளி தாய இயற்கை யெழுத்துகளால் நடை பெற்றுவந்த இயற்கை மொழி யென்பது துணிபாகின்றது. வர வர மக்களுடைய நாவானது முதிர்ச்சிபெற்று வந்தமையின் பழந்தமிழ்க்கு நெடிது காலம் பிற்பட்ட செந்தமிழாசிரியர்கள் ரகரமுதலிய செயற்கை யெழுத்துகளை மொழி முதலில் மாத்திரம் விலக்குவாராயினர். எனவே பழந்தமிழாசிரியர் இடைகடைகளிலும் விலக்கினா ரென் பது.

"பன்னீருயிருங் கசதநபமவய
ஞங வீரைந்துயிர் மெய்யுமொழி முதல்" (நன்னூல்)

"டண ரலளழறன என இவை யெட்டும்
மொழி முதலாக எழுத்தென மொழிப"

எனப் பாரிசேடத்தாற் பெறப்படுகின்றது.

டகர ணகர முதலிய செயற்கை யெழுத்துகள் எட்ட னுள்ளே லகரமென்னும் செயற்கை யெழுத்துத்தான் முதல் முதலுண்டாயது. அது ஏனைய செயற்கை யெழுத்துகள் போல் நாவிற்குக் கடினமாக மாட்டாது. அதனால் பழந்தமிழில் விலக்கப் படாததாயிற்று.

ரளழ என்னும் எழுத்துகளும் மேற்கூறப்பட்ட டணறன என்னும் மெய்ச்சந்தி யெழுத்துகளும் லகரத்தினின்றே யுண் டாயினவாம். டகர முதலிய செயற்கை யெழுத்துகளை மொழி முதலில் விலக்கிக் கூறினதை யுணரின் பழந்தமிழ்ச் சொற்கள் பெரும்பாலும் இடை கடைகளிலும் இயற்கை யெழுத்து அமை யப் பெற்றிருந்தன என்பது வலியுறுகின்றது.

அகம், ஆசி, மநம், மதம் முதலியன முழுதும் இயற்கை யெழுத்தாலாய சொற்களாம். மரம், மடம், மணம், வள முதலி யன இடையிற் செயற்கை யெழுத்து வந்த சொற்களாம். அகம்,

ஆசி முதலிய சொற்கள் நாவிற்கு எளியனவாகும். மரம் மட முதலிய சொற்கள் கடின மாகும்.

'கிழவனுழுத புழுதியிலே கிண்டி முளைத்த பனையோலை கீழேழோலை மேலேல ழோலை'

'கடலிலே யுரலுருள்கின்றது'

என்பவற்றுள் செயற்கை யெழுத்துகள் மிகுதியாதலால் நாவிற்குக் கடினமாகின்றது. விரைந்து கூறின் தடைபடும்.

லகர முதலிய அச்செயற்கை யெழுத்துகளெட்டும் நாவானது அண்ணத்தைத் தொடலால் பிறப்பனவாகலின்; அவற்றுக்கு நாவின் முயற்சி மிகவேண்டு மென்பது. உடற்கூறு வளராதிருக்கினும், வளர்ந்து நோய் முதலியவற்றால் தளர்ச்சி பெறினும், நாவும் தளர்ச்சி பெருநிற்கும். உடற்கூறு=தேகதத்துவம்.

பழந்தமிழ் மக்கட்கு உடற்கூறு வளர்ச்சி பெற்றும் தமக்கு முன்னர் ஓர் பாஷையு மில்லாமையின் செயற்கை யெழுத்துக் கடின மாயிற்று.

குதிரை முதலியவற்றுக்கு உடற்கூறு வலிவு பெற்றிருந்தும் அவை பேசுகின்றில; கிளி முதலியவற்றுக்கு உடற்கூறு மெலிந்திருந்தும் அவை பேசுகின்றன. ஆதலின் உடம்பின் வலிவு வேறென்க.

## மொழியிறுதி

பழந்தமிழில் உயிரீறும் மகர மெய்யீறும் லகர மெய்யீறும் முதல் முதலுண்டாயின. மற்றைய ஈறுகள் பிறகுண்டாயினவாம். மகரஈறு மற்றைய பாஷைகளிற் குறைவு. தமிழின் பிரிவாகிய மலையாள முதலிய பாஷைகளில் அம்மெய்யீற்றுச் சொற்கள் அகரவிதியீருக வேறுபட்டன. அவ்வகர விதியீற்றுச் சொற்களில் பல ஆரியத்தில் விசர்க்க முதலியன பெற்று வேறுபட்டன.

உ-ம். வலம்—பழந்தமிழ்
,,வல—மலையாளம்
,,வலஃ—ஆரியம்
வலை—செந்தமிழ்
பாசம்—பழந்தமிழ்
,,ஹாஸ—இந்து
,,ஹாஸஃ—ஆரியம்
பாசு—செந்தமிழ்
பாசம்—மூங்கில்.

ஐகார ஈறு செந்தமிழிலுண்டாயின; மற்றைய பாஷைகளில் அவ்வீறு இல்லை.

## வரிவடிவு

பழந்தமிழ் நெடுங்காலம் ஒலி வடிவிலேயே யிருந்தது. பிறகு வடிவெழுத்துகள், இயற்கை வடிவாகிய வட்டெழுத்தினின்றே உண்டானமையின் வட்டெழுத்துகளாகவே யிருந்தன.

பழந்தமிழின் முதற்பிரிவாகிய பாளியிலுள்ள எழுத்துகளெல்லாம் வட்டெழுத்துகளாம். தெலுங்கெழுத்துகள் வட்ட வடிவமாக அமைந்திருந்த காலத்து அவை யுண்டாக்கப்பட்டன என்க. தெலுங்கில் வரிவடி வுண்டாய பின்னரே கன்னட முதலியவற்றில் வரிவடி வுண்டாயின. சிலாசாசனப் புலவர்களும் தமிழெழுத்துகள் முன்னர் வட்டெழுத்தாய்ப் பின்னர்க் கோலெழுத்தாய்ச் சதுரெழுத்தாயினவெனக் கூறுவர்.

இனி "உட்பெறு புள்ளியுருவாகும்மே" (நூன்மரபு சூ. கச) என்னும் தொல்காப்பிய சூத்திரம் பகரத்தின் மகரத்திடை வேறுபாடுணர்த்த எழுந்தது. புறத்துப் பெறும் புள்ளியொடு உள்ளாற் பெறும்புள்ளி மகரத்தின் வடிவாம். அஃதின்மை பகரத்துக்கு வடிவாம். (உ-ம்.) ப். ப் எனக்கண்டுகொள்க என்பர் உரையாசிரியர். அஃதின்மை புறப்புள்ளியின்மை. இத

ஞல் அக்காலத்துள்ள பகரம் இக்காலத்து மகரம் போன்றிருந்த தென்பது விளங்குகின்றது.

விளங்கவே இப்பொழுது கிரந்தத்திலுள்ள ூமகரத்தின் வடிவையுணர்தற்கு அச்சூத்திரம் எழுந்ததெனத்தெளிதல்வேண்டும்.

O இது புறப்புள்ளி.
ϭ இது உட்புள்ளி.

இப்பொழுது அச்சூத்திரப் பொருள் விளங்குதல் காண்க. அப்புறப் புள்ளியின்மை பகரத்திற்கு வடிவாம். ϭ. இங்ஙனம் உள்வளைந்திருத்தலின் உட்புள்ளி யென்றார். புறப்புள்ளியின் றேல் பகரத்துக்கும் Ⴝ (ம) கரத்துக்கும் வேறுபா டின்மையின் "உட்பெறு புள்ளி யுருவாகும்மே" எனச் சூத்திரம் செய்தனர்.

உரையாசிரியர் காலத்தும் தமிழில் அவ்வரிவு இருந்தமையால் அத்தன்மை யறிந்து உரைகூறினர். உதாரணத்தைப் பிற்காலத்தார் அக்கால வழக்குப்படி வேறு படுத்தினர். இதனானே கிரந்தத்திலுள்ள எழுத்துக ளெல்லாம் பழந்தமிழிலுள்ள இயற்கையாகிய வட்டெழுத்துகளின் சிதைவெனப் புலனாகின்றது. வட்டவடி வொன்றே யியற்கை வடிவு. சதுரம் கோண முதலியன செயற்கை வடிவாம். அவ்வட்டெழுத்துக ளெல்லாம் வலம் புரியாக நடைபெறும். வாழைக் குருத்து முதலியன வலம் புரியாக முறுக்கவிழ்தலின் அதுவே யியற்கை நிகழ்ச்சி.

இவ்வாராய்ச்சியில் பழந்தமிழ் நாவிற்கு எளிதாய இயற்கை யொலிவடி வெழுத்துகளைப் பெற்றிருந்ததோடு கைக்கு எளிதாய வியற்கை வடிவெழுத்தும் இயற்கை நிகழ்ச்சியும் பெற்றிருந்த தென்பது அங்கைக்கனிபோல் விளங்குகின்றது.

(தொடரும்)

மாகறல். பொன்னுசாமி முதலியார்.

---

# காழித்தேவாரச் சிறப்பு

(ந அ௰-ம் பக்கத் தொடர்ச்சி)

இங்ஙனம் வலம்புரி மண்டபத்தும் கழகங்களினும் திருமுறைகளை ஓதுவிப்பாரும் ஓதுவாரும் இன்ன தன்மையின

ராக இருந்து ஓதுவித்தும் ஓதியுணர்ந்தும் பெரும்பயன் துய்ப்பர். இனித் திருமுறைகளை உரைப்பாருங் கேட்பாரும் திராவிட கலா நியமத்தின்கண் விதிப்படி யமர்ந்து உரைத்தும் கேட்டும் வந்த பிரபாவத்தை ஒருபடித்தாகக் கூறுவோம். இக்கலா நியமம் காழியுத்தர வீதியின் நாப்பண் வடசிரேணியிற் கணநாதராலய மொன்றின் கீழ்சார் இருந்தது. இத் திருமடத்தின் மேற் சார்பில் முன்னர்க் கூறிய திருக்கை கோட்டிகளின் திருமாளிகையும், கீழ்சார்பில் இக்கலா நியமத்தார் வீற்றிருந்து மங்கலத் திருநாள்களில் உரைத்தற்கு ஸ்தானமும், வலப்பக்கத்துக் கந்தழியென்ற பெருநிலைப் பொருளை உணர்தற்கு அமைந்தோர் திருநிலையினின்று தேர்தற்குப் பரமராசியத் தானமும் உளவாயின. இவற்றுள் பரமராசியத் தானத்து உணர்தற் பயத்தவாய திருத்தேவாரத் துட்பொருள் எம்மனோராற் சொல்லுந் தகைத்தன்று. ஆங்கிருந்து உண்மைப் பொருளைத் தென்கலை யுணர்ச்சியான் உணர்ந்த பெரியாரது நிலையை இப்போது யாம் கேட்பினும் விஸ்மிதராகின்றோம். இக்கலா நியமங் நிலமாய பின்னர் இவ் விரகசியத் தானத்தை வலம்புரி மண்டபத்துட் பெரியார் அமைத்தனர். அதனுள் இன்னும் சில பரம ரகசியங்கள் கந்தழி நிலையை உணரும் பெரியார்க்கு விளங்குவனவாம்.

இக்கந்தழியைச் சொற்படுத்தி யுரைக்குமிடத்து, அது புருஷார்த்தங்களைத் தருவதாகிய பதிப்பொருளின் பரத்துவ நிலையின்பாற் சிற்சொரூப நிலைக்கப்பாற் சுத்த சிவ மெனலாகும்.

தொல்காப்பியர்—"கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற-வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்-கடவுள் வாழ்த்தொடு கண்ணியவருமே" என்பதற்குக் கொடிநிலை=கீழ்த்திசைக் கண்ணே நிலைபெற்றுத் தோன்றும் வெஞ்சுடர் மண்டிலம்; கந்தழி=ஒரு பற்றுக்கோடின்றி அருவாகித் தானே நிற்குந் தத்துவங் கடந்த பொருள்; வள்ளி=தண்கதிர் மண்டிலம், என்று சொல்லப்பட்ட குற்றந்தீர்ந்த சிறப்பினையுடைய முற்கூறப்பட்ட மூன்று தெய்வமும் முற்கூறிய அமரரோடே கருதும் ஆற்றுல் தோன்றும் என்ற நச்சினார்க்கினியர் திருமுருகாற்றுப் படையில்—கந்தழியாவது ஒருபற்று மற்று அருவாய்த் தானே நிற்கும் தத்துவங்

கடந்த பொருள்; அது "சார்பினுற் றோன்றாது தானருவாய்-மைதீர் சுடர்" என்பதாம்; இதனை "உற்ற வாக்கையி னுறு பொரு ணறுமல ரெழுதரு நாற்றம்போற்-பற்றலாவதோர் நிலையிலாப் பரம் பொருள்" என அதனை உணர்ந்தோர் கூறியவாற்றா னுணர்க என்று மேலுங்கூறுவர். ஐயனாரிதனார்—பாடாண். பாடாண்டிணையாவது "ஒளியும் ஆற்றலும் ஓம்பா ஈகையும்-அணியும் என்றிவை ஆய்ந்துரைத்தன்று" கடவுள் வாழ்த்து—"காவல் கண்ணிய கழலோன் கைதொழும்-மூவரில் ஒருவனை எடுத்துரைத்தன்று" என்றும், புறநிலை வாழ்த்து—"வழிபடு தெய்வ நிற்புறங் காப்ப-வழிவழி சிறக்கென வாய்மொழிந்தன்று" கொடிநிலை—"மூவர் கொடியுள்ளு மொன்றொடு பொரீஇ மேவரு மன்னவன் கொடிபுகழ்ந் தன்று." கந்தழி—"சூழு நேமியான் சோவெறிந்த-வீழாச்சீர் விறன் மிகுத்தன்று." வள்ளி— "பூண்முலையார் மனமுருக-வேன்முருகற் கற்கு வெறியாடின்று." என்பர். விக்கின த்வம்சத்திற்கு அநுகூலமான வியாபாரத்தை அதாவது மனோவாக்குக் காயங்களின் கிரியையை மங்கலம் என்ப. அம்மங்கலம் வஸ்து நிர்த்தேசரூபம், ஆசீர்வாதரூபம், நமஸ்காரரூபம் என்னும் பேதத்தால் மூன்று வகையாம் என்பர். கடவுண்மாட்டுக் கடவுட் பெண்டிர் நயந்த பக்கம்—"முக்கணான் முயக்கம் வேட்ட-மக்கட் பெண்டிர் மலிவுரைத்தன்று" என்ற ஐயனாரிதனாரைப் பின்பற்றுவர் இளம்பூரணர், வைத்தியநாத நாவலர். வீரசோழிய வுரையிற் பெருந்தேவனார்—"கொடிநிலையாவது கொடியது தன்மை கூறுவது; கந்தழியாவது செருவில் தெட்ப முடைமை; வள்ளியாவது முருகவேளைக் குறித்தது" என்றும் கூறுவர். மற்றும் பெரியார் சிலர்—"கொடிநிலை மேகம்; மின்னற் கொடிக்கு நிலைக்களமானது, கீழ்த்திசைக் கண்ணே நிலைபெறுதலுடையது, நீடல் நிலையுடையது; மேகவாகனன் திசை கீழ்த்திசை. கந்தழி பற்றழிவு; உலகங் குறையாது தடுப்பது. பற்றழிந்தார் நீத்தார். வள்ளி வண்மையாகிய அறத்திற்குக் கடவுள். இங்ஙனம் மேகம் நீத்தார் அறம் என்ற மூன்றும் கடவுளை முதலாகக் கொண்டு வாழ்த்தப்படும். இவ்வாழ்த்து கடவுளை முன்னிலையி

லும் படர்க்கையிலும் பரவுதலும், அரசர்க்கு ஆக்கங் கருதிப் பரவுதலும் ஆம். அரசர்க்கு ஆக்கங் கருதியவழி ஐயனாரிதனார் கூறுவர்—கந்தழி (உழிஞை) யாவது பகைவர் மதிலை வளைத்தல். கந்தழி "மாவுடைத்தார் மணிவண்ணன்-சோவுடைத்த மறனுவ வின்று." கந்தழி (பாடாண்)—மேற்காட்டியது. நம்மாழ்வார்—திருவாய்மொழி, முதற்பத்து, முதற் றிருவாய்மொழியிலும், மாணிக்கவாசகர்—ஞானவெற்றி-வளைந்தது வில்லு...திருவுந்தியார் (திருவாசகம்) கண்ணும் கந்தழிநிலை உணர்த்தினர்" என்று சாற்றுவர். சேக்கிழார்—'உலகெலாம்...அரியவன், சோதியன், வேணியன், ஆடுவான் என்று அருவம் உருவம் அருவுருவம் ஆகிய உருவங் கூறி, "ஆதியாய்" என்று நிஷ்கள நிருத்தமும், 'கற்பனை" என்று சகள நிருத்தமும் அருளிச்செய்தார். கம்பர்—அயர்வரும் அமரர்கள் அதிபதியாய், பையரவின் அணைப் பாற்கடலுள் பள்ளிகொள்ளுகின்ற பரமூர்த்தி அரக்கர்தங் கொடுமை கூறிய விண்ணவர் முனிவர் மகிழ வஞ்சகர்தம் தலை அறுத்து இடர்தணிப்பன் எனக் கூறித் தசரதன் மதலையாய்த் தரணியில் ராமனாகத் திருவவதரித்தனர் என்று,

| | |
|---|---|
| 'உலகம் யாவையும்'—கிரியை-சொரூப நிலை.<br>'சிற்குணத்தர்'—ரூபம்-பரத்துவம்.<br>'ஆதியந்தம்'—நாமம்-புருஷார்த்தம். | என அர்த்த பஞ்சகம் கூறுவர். |

திருத்தக்க தேவர்—அருக, சித்த, சாதுதன்ம சரணங்களை, 'மூவர்"—சித்தன், "செம்பொன்"—அருகன், "பன்மாண்"—சாது தன்மம் எனத் துதித்தார். வேதாந்தம்—அவிகிருதம் விகிருதம் என்றும், சித்தாந்தம்—அவ்வியக்தம் வியக்தம் சிவலிங்கம் சிவமூர்த்தம் என்றும் கூறும். இளங்கோவடிகள்—திங்கள், ஞாயிறு, மாமழை இவற்றை வாழ்த்தினர். திருக்குறள்—கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் இவை பாயிரம் ஆகக்கூறும். இக்கந்தழி நிலையைத் திருத்தேவாரங்களை யுணர்ந்த பெரியார் வடகலை தென்கலை என்ற இருபெருங் கலையினும் வைத்து, அந்நிலையினை யுணர்த்தமாட்டாத ஏனைச் சமய நூற்களை ஒழித்து, சைவார்த்த நிர்ணயஞ் செய்த முறையை விளக்கும் நூற்கள்:—

## வடகலை

| சுருதி | | | | மிருதி | | | |
|---|---|---|---|---|---|---|---|
| வேதம் | பிராமணம் | ஆரண்யகம் | உபநிஷத் | சிரௌதசூத்திரம் | கிருஹ்ய சூத்திரம் | தர்ம சூத்திரம் | |
| இருக்கு | ஐத்ரேயம்<br>கௌஷிதகி | —<br>— | —<br>— | ஆஸ்வலாயனம்<br>சாங்க்யாயனம் | —<br>— | வசிஷ்டம் | ஆகம தந்திரங்கள் (பூர்வ) |
| சாமம் | பஞ்சவிம்சம்<br>சாந்தோக்யம்<br>தலவாகரம் | | —<br>கேனம் | மாசகம்<br>த்ராஹ்யாயனம்<br>லத்யாயனம் | ஸம்பவ்யம்<br>கோபிதம்<br>காதிரம் | கௌதமம் | |
| கிருஷ்ணயசுர் | தைத்ரேயம்<br>,, | —<br>,, | —<br>—<br>கடம்<br>மைத்ரேயணியம்<br>சுவேதாசுவதரம் | போதாயனம்<br>ஆபஸ்தம்பம்<br>ஹிரண்யகேசி<br>பாரத்வாஜம்<br>மாணவம் | —<br>—<br>காதகம் | போதாயனம்<br>ஆபஸ்தம்<br>ஹிரண்யகேசி | |
| சுக்லயசுர் | சதபதம் | பிருஹத் | —<br>ஈசம் | காத்யாயனம் | பாரஸ்காரம் | மாணவம் க. (பூர்வம்)<br>வேதாங்கம் சு. பூர்வம் | |
| அதர்வம் | கோபதம் | | முண்டகம்<br>பிரஸ்நம்<br>மாண்டூகம் | வைதனம்<br>கௌசிகம் | கௌசிகம் | வர்நம் ச. ஆச்ரமம் ச<br>சாஸ்திரம் சு. பூர்வம்<br>வித்தை க அ. கலை சு ச | |

இவற்றுட் சைவகலை கூறுவன பிரபல வாக்கியம்.

# தென்கலை

| அகம் | | | புறம் | | |
|---|---|---|---|---|---|
| | | | அறம் | பொருள் | |
| அருள் - பரிவு<br>இசை<br>^<br>வாய்மொழி<br>வாரம் நெறி பாடல்<br>முகம் இடை முரி<br>பரிபாடல்<br>செந்துறை<br>வெண்டுறை<br>முத்தகம்<br>பெருவண்ணம்<br>ஆற்றுவரி<br>கானல்வரி<br>விரிமுரண்<br>தலைபோகு<br>பெருந்தேவபாணி<br>சிறுதேவபாணி | கூத்து (வரி)<br>^<br>முதனடை<br>வாரம்<br>கூடை<br>திரள்<br>செந்துறை<br>வெண்டுறை<br>வண்ணம்<br>சிந்து<br>திரிபதை<br>சவலை<br>சம்பாதம்<br>பெருந்தேவபாணி<br>சிறுதேவபாணி | ஒழிந்த ௫ + ௨ | படி<br><br>கரணங்கள் | முறை<br><br>கீழ்க்கணக்குக்கள் | வஞ்ரு கூ<br>முதுமொழி<br>முப்பால்<br>அறநெறி<br>கா ஞ் ரு |

இயல்
உரு
ஒத்து

**சைவர்**
- சைவத்திருமுறை ௭ + ௪ + ௧
- ரசசியங்கள் ௧௪ + ௧௪
- —

**வைஷ்ணவர்**
- திவ்விய பிரபந்தம் ௪
- ரகசியங்கள் ௧௮
- —

புறக்கலை நீங்கிய சைவகலை

**பௌத்தர்**
- திரிபிடகம்
  - விநாயம் - ௩ + ௨
  - சூத்திரம் - ௫
  - அபிதன்மம் - ௬

**சமணர்**
- வாய்மொழி
  - பஞ்சாஸ்தமயம்
- பூர்வாகமம் அங்காகமம்
  - வெகுசுருதி

பிறகலை

இந்நூல்களுட் கழிப்பனவற்றைக் கழித்துச் சைவராவார் சைவத் திருமுறைகளையும் சைவரகசியங்களையும் உரைப்பதற் கேற்ற உண்மைநூல்களாகக் கொண்டு கேட்பார்க்குத் தேவார ரகசியங்களை உரை வழங்கிவருவா ராயினர். அவ்வுரையினை அவ்வாறு வழங்கி வந்த இக்காழிக் கழுமல முதுபதியிற் பல பெரியார் பலகாலத்தும் பலவகையா லுரிமை யுற்றிருந்தனர்.

அக் காழிப் பெரியார்

1 அம்மையப்பர்
2 காளிகேசர்
3 பராசரேசர்
4 பிரமேசர்
5 மூத்த பிள்ளையார்
6 இளையபிள்ளையார்
7 கஞ்சுகர்
8 தாடாளர்
9 கழுமலநாயகி
10 ஐயனார்
11 தொல்காப்பியர்
12 கரிகாலர்
13 செங்கணார்
14 பொய்கையார்
15 அப்பர்
16 கணநாதர்
17 மங்கையர்க்கரசியார்
18 சம்பந்தர்
19 மங்கைமன்னர்
20 சுந்தரர்
21 மாணிக்கவாசகர்
22 விஜயநந்திச்சோழர்
23 பட்டினத்தடிகள்
24 ராஜராஜசோழர்
25 நம்பியாண்டார் நம்பி
26 உத்தமசோழர்
27 அநபாயசோழர்
28 சேக்கிழார்
29 ஒட்டக்கூத்தர்
30 பேராசிரியர்
31 நேமிநாதர்
32 அருணமச்சிவாயர்
33 கங்கை மெய்கண்டார்
34 சிற்றம்பலநாடிகள்
35 தருமையாதீன கர்த்தர்
36 ஆதிமுத்துத்தாண்டவர்
37 கண்ணுடையவள்ளல்
38 சிவஞானவள்ளல்
39 கச்சியப்பசிவாசாரியார்
40 முத்துத்தாண்டவர்
41 வடுகநாததேசிகர்
42 ஞானதேசிகர்
43 சட்டைநாதவள்ளல்
44 அருணாசல கவிராயர்
45 சிதம்பரநாத முனிவர்
46 அம்பலவாணகவிராயர்
47 மீனாக்ஷிசுந்தரபிள்ளை
48 சபாநாயகமுதலியார்
49 காலவித்தாதியர் (குண தலைப்பாடியார் உட்பட.)
50 காழியிற் பூசித்தோர்
51 காழியிற் பணிசெய்தோர்

முதலியோரும் பிறரும் ஆவர்.

இப்பெரியாருள் (கள) கண்ணுடைய வள்ளலார் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரது திருவருளால் வள்ளல் பரம்பரையினர்க்குத் தாபனு சாரியராய்த் திருத்தேவார திருவாசகங்களுக்குத் திருவுள்ளக்கிடையும் திருவுரையும் வகுத்தனர். (கஉ) அருணமச்சிவாயர் (கக) காழிக்கங்கை மெய்கண்டார் உள்ளிட்ட பெரியார்கள் சந்தான பரம்பரையைத் தழுவிச் சைவத்திருமறைகளுக்குத் திருவுரை வகுத்தனர்கள். சைவாதீனங்கள் யாவும் இத்தென்னாட்டிற் பெரும்பாலும் இவர்களது சார்பினவே யாவன. இச்சார்பை ஒருவாறு விளக்கும் திருமுடியடைவு:—

உமாபதி சிவாசாரியர் 1250

காழி மச்சுச் செட்டி 1280

அருணமச்சிவாயர்
(கொற்றவன்குடி)

காழிக்கங்கை மெய்கண்டார்
(காழி) 1325

காழிச்சிற்றம்பலநாடி
(சித்தர் வனம்)

கண்ணப்பர்
ஞானப்பிரகாசர் (காஞ்சி)
தத்துவப்பிரகாசர்
சிவப்பிரகாசர்
தவப்பிரகாசர்

சுயம்பிரகாசர் 63

சிவஞானவள்ளல்

காழிப்பெரும்பழுதை
கட்டி-
சிற்றம்பலவர்
(மதுரை) 1365

பழுதைக்கட்டி-
ஞானப்பிரகாசர்
(காளத்தி) 1400

சிதம்பரநாதர்
சமலை ஞானப்பிரகாசர்
(ஆரூர்) 1460

* ஞானசம்பந்த தேசிகர்
(தருமை) 1515

காழிச்சிறுபழுதை
கட்டி-
சிற்றம்பலவர்
(திருச்செந்தூர்)

திருவாவடுதுறை சித்தர் சிவப்பிரகாசர்
(துறையூர்) 1326

* மூவலூர் நமச்சிவாய தேசிகர்
(திருவாவடுதுறை) 1370
துவிதீய, சிவப்பிரகாச தேசிகர்
(வடதளி)

துறையூர்
ஆதீனம்

ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளை,
சீகாழி.

# முற்காலமுந் தற்காலமும்

(௩அசுா-ம் பக்கத்தொடர்ச்சி)

மக்கள் எந்நாட்டினராயினும் அவர்கள் அகத்திபற்கை யொன்றே. நிலத்தின் தட்பவெப்பங்களால் உடையிலும் உணவி லுந் தோற்றத்திலும் பேதங்கள் சில ஏற்படினும் குணத்திலும் நடக்கையிலும் மக்களனைவரும் ஒரு தன்மையரே. சமைய லறைப் பல்லி கருநிறமுடையதாயும் சுண்ணாம்படித்த வெள்ளைச் சுவரில் வசிக்கும் பல்லி வெண்ணிற முடையதாயுமிருப்பதால் அறியாதார் இவற்றைப் பார்ப்பாரப்பல்லி என்றும் பறைப்பல்லி என்றும் பெயரிடினும் அவை யிரண்டிற்கு முள்ள நிற வேற் றுமை அவை வாழுமிடத்தின் நிறவித்தியாசத்தால் பிறப்ப தென்பது திண்ணம். தோற்றத்தில் அவை ஒன்றிற்கொன்று வேறுபட்டிருப்பதால் அவற்றின் தன்மை மாறிவிடுவதில்லை. ஈரா யிரமாண்டுகட்கு முன் நன்னிலை யெய்திய கிரேக்க, ரோம (Greek and Roman) நூலாசிரியரிற் சிலர், அந்நாளிலேயே தமது பழைய ஒழுக்கஞ் சிதைந்ததை நினைந்து வருந்தி வரைந் துளர். பதினெட்டாம் நூற்றாண்டு ஆங்கிலப் புலவரும் அக்காலத்து இளமக்கள் பிறநாட்டு நடையுடைகளைப் பின்பற்றினமையைக் கண்டு வெகுண்டு கூறியிருப்பதுடன், தமது மூதாதைகளின் பழக்கங்களுட் பலவற்றைச் சிறப்பித்தும் பேசியுள்ளார். இற் றைக்கு மவவாறு சொல்லுவோருளர். புகைவண்டிகள் முதலில் இங்கிலாந்தில் ஓடத் தலைப்பட்டபோது அவற்றைப்பற்றி அச்ச மும் வெறுப்பு முண்டாயினவேயன்றி ஜனங்களுக்கு ஆவலுங் களிப்புந்தோன்றவில்லை. நீராவியாலியக்கப்படுங்கப்பல்கள் முதன் முதல் ஐரோப்பாவில் வந்தபோது அவற்றைப் பேயின் இயந்தி ரங்களென்று பலர் புறக்கணித்தனர். கத்தியும் முள்ளுங் கரண்டி யும் (Knife, fork and spoon) கொண்டுண்ணும் ஐரோப்பியர் நம்மைப்போற் கையாலுண்டு கொண்டிருந்ததைக் கைவிட்டு முந்நூறு ஆண்டுதா னாயிற்றென்பதை நம்மவரிற் பலரறியார்; அவர்களிலும் பெரும்பாலோர்க்கு இது தெரியாது. கரண்டியும்

முன்னுங் கீழ் நாடுகளிலிருந்து ஐரோப்பாவிற்குச் சென்றன வென்று கூற இடமுண்டு. முதன் முதற் காண்டியாலுண்டவரைக் கண்டு பிறர் வெறுப்புற்று இழிமொழி வழங்கினரென்று மேல் நாட்டினர்தாமே வெளியிட்டிருக்கின்றனர். தேயிலை, காப்பி ஆகிய பானங்கள் ஐரோப்பியரா லுபயோகிக்கப்பட்டு வருவதெல்லாம் சென்ற இருநூறு வருஷங்களுக்குள்ளே தான். இவைபோல்வன இன்னுஞ் சில உள. இவற்றையெல்லாம் மேல் நாட்டார் எளிதிலேற்றுக் கொண்டதில்லை; பலவாற்றானு மிவற்றை முதலிற் றடுக்க முயன்றனர். ஆகலின் பழையன கழிதலும் புதியன புகுதலும் அவசியமாயினும் அங்ஙனஞ் செய்வது மக்களெல்லோருக்கும் தொடக்கத்திற் றிகைப்பைத் தருமேயன்றி உவப்பை யளிப்பதில்லை. ஆயினும், துணிவு மெதிர் நோக்கு முடைய சிலர் புதியவற்றை யாரம்பஞ்செய்து பிறரையுந் தம்மாட் டீர்த்துக் கொள்வர். இதுவே உலகெங்கும் முறை யென்பது இன்னும் ஓர் உதாரணத்தால் நன்கு புலப்படும். உயிர் வகைகளின் தோற்றம் (Origin of species) என்னும் அரிய நூல் வெளிப்பட்டகாலை உயிர்நூல் வல்லாரும் மதசாஸ்திரப் பண்டிதரும் அதன்கண் புதிதாய்ப் புகட்டப்பட்ட சில உண்மைகளைக் கண்டு நடுங்கி, அவற்றால் உலகிலுள்ள பற்பல கொள்கைகளுக்கு எண்ணிறந்த தீங்கு விளையுமென்று அச்சிலும் பேச்சிலும் பெருங் கூச்சலிட்டனர். இதனாற் சண்டமாருதம்போற் பெருவாதம் நிகழ்ந்தது. இவ்வாதத்திற் கோபமாகிய அனல் மூண்டு எரிந்ததேயன்றி அறிவாகிய ஒளி அதிகமாய்ப் பிரகாசிக்கவில்லை. மனிதக்கு மனக்குழப்பம் முன்னினு மதிகமாயிற்று. உயிர்வகைக ளெங்ஙனம் உண்டாயிற்றென்று எடுத்துக்காட்டிய உண்மைகளைப் பரிசோதித்து, மறுக்கவியலாமல், அவ்வுண்மைகளை யங்கீகரிப்பதால் வருங் கேடுகளைப் பெருக்கி வருணித்து நூலாசிரியரையு மவர்க்குச் சார்பாய் நின்றவரையுங் கடு மொழிகளாற் கண்டித்தனர். இப்பொழுதோ சகலவித சாஸ்திரங்களிலு மவ்வுண்மைகளை ஏற்றுக்கொள்ளாதா ரிலர் என உறுதியாய்க் கூறலாம். உயிர்வகைகளின் தோற்றத்தை இயற்றிய சாலப் பேரறிஞராகிய டார்வின் (Darwin) என்ப

வருடன் ஒரு காலத்தவரும், அரசியல், தேசசரித்திரம் இவற்றைப்பற்றி நுண்ணிய நூல் பல செய்தவருமாகிய கார்லைல் (Carlyle) மேற்சொன்ன புத்தகத்தைக் கேள்விப்பட்டு அதன் மீது குன்றுதபகை பாராட்டி, அதைத் திறந்து பார்க்கவுமிணங்காதாராயினர். ஆயினும், உண்மையை எதிர்த்து நின்று மாய்க்க வல்லாரெவருமில்லை. இதைக் கார்லைல் தாமே, தாம் வரைந்தவற்றுட் பல விடங்களில் ஆணி யறைந்தாற்போல் கூறியிருக்கின்றனர். இகழினும், பழிக்கினும், எதிர்க்கினும், பகைக்கினும் உண்மை உயர்ந்தோங்கி வளருமென்பதை யுலக சாஸ்திரம் கையிற் கனிபோற் காட்டும். எனினும், புதிய உண்மைகளைப் போற்றி ஏற்றுக்கொள்வார் கற்றோருள்ளும் வெகு சிலரே. தற்காலத்தைப் பற்றிச் சிறிதுங் கவலைப்படாமல் முற்காலத்திலேயே மனவாசஞ் செய்யும் பெரியோருமுளர். பிரபல ஆங்கிலப்புலவர்களாகிய சர். வாற்றர் ஸ்காட் (Sir Walter Scott), உவில்லியம் மாரிஸ் (William Morris) போன்றவர்கள் தாமிருந்த பதினெட்டாம் பத்தொன்பதாம் நூற்றாண்டுகளின் நிலைமை தம்மனத்திற் கமைதி கொடாமையாலும் இன்னுஞ் சில முகாந்தரத்தாலும், அவற்றின் முற்கால ஒழுக்கங்களி லீடுபட்டவராய்ப் பண்டை நாட்களில் நடந்தவற்றை இனிமையாய் விரிக்கும் நூல்களையே பெரும்பாலு மியற்றிப்போயினர். ஆதலின், இறந்த காலத்தைப் பெரிதும் வியந்து மகிழ்தல் நமக்கே சிறப்பாகிய ஒரு பண்பன்று; பிறரைக்காட்டிலும் நம்மிலது சிறிது மிகுந்து காணப்படுமென்பது நியாயங்களுடன் முன் காட்டப்பட்டது. புதியவற்றைத் தழுவிக் கொள்வதிலும் மேல் நாட்டார் மிகுந்த துரிதமுடையவ ரல்லரென்பதும் மேலே ஒருவாறு விளக்கப்பட்டது. மக்களது மனப்போக்கு எங்ஙனும் ஒன்றே.

மலர்களில் மல்லிகை முல்லையாகிய இரண்டும் நறுமணமுளவாய் முகர்வதற் கின்பந் தருவனவாகவும், இவற்று ளுயர்ந்தது தெதுவென வினவெழுப்பி நெஞ்சு புண்ணுவாருமுண்டு. நீலோற்பலம் செந்தாமரைப்போ லில்லையென்று இவர் கடிந்து கொள்

வர். மாதுளை மாங்கனியைப்போ லில்லையெனப் பகர்வதால் போந்த பயனென்னை? இத்தகையார் ஒன்றோடொன்றை ஒப்பிட்டுப் பார்த்து உயர்ந்ததிது தாழ்ந்ததிதுவென ஒரு முடிவிற்கு வந்தாலன்றிக் கண் துயிலார்போலும். திருவள்ளுவரையுந் தொல்காப்பியனையுந் துலாவிலேற்றிச் சீர்தூக்கி நிறையிலெவர் மிகுந்தவரெனத் துணியுந்துணையும் "என் தூங்கும் என் கண் இரா" என்றிருப்போரை என்னவென்று சொல்வது? ஒவ்வொன்று மதனத னிடத்திலுங் காலத்திலுஞ் சிறப்புற் றிலங்குமென்பதை யுணராதார்க்கு அறிவு கொளுத்துவ தெங்ஙனம்? இவரனையர் துறவறத்தைப்பற்றி விரித்துரைக்கக் கேட்டு அதனினு முயர்ந்த தில்லை யெனப் பல பேசி நல்லறமாகிய இல்லறத்தை யிகழ்ந்து நாப்பறையறைவர். "ஊழிற் பெருவலி யாவுள" என்று கூறிய வள்ளுவர் மொழியை வியந்து உவந்து நாவிற் சுவைத்து விதியே பெரிதென்று கூத்தாடுவார்; "ஊழையு முப்பக்கங் காண்பர்" என்று குணக்குன்றாகிய ஆசிரியர் மற்றோரிடத்தில் விளம்பியது அவர்கள் கண்ணிற் படுவதுமில்லை, செவியிலேறுவதுமில்லை. இவர் கோணிய மனத்தின ரென்பதிலையமு முண்டோ? ஊழுமுயற்சியுங் கூடிய இவ்வாழ்க்கையி லொன்றையே பாராட்டி மற்றொன்றை மறத்தல் பிழையாகும். எனினும், இவ்வாறு செய்பவரை நாடோறுங் காண்கின்றோமன்றோ? ஒவ்வொன்றிற்கு மிருபுற முண்டென்பதை மறந்தாருடனும் மதியாருடனும் வழக்காடுவதரிது. நடப்பதெல்லாம் விதியின் செயலெனப் பகர்ந்து கடமையிற் றவறுதல் குறுமதியாமாறே, நம்மாலாகாத தொன்றில்லை யெனச் செருக்கி ஊழை இகழ்தல் மடமையாகும். ஆகலின், முன்காலம் நன்று; தற்காலந் தீது என்று அடைமொழியின்றிச் சொல்வது அறிவிற்குப் பொருந்தாது.

ஒருவன் உலகில் இறந்தொழிந்தவரைக் கணக் கெடுப்பதிற் கவனத்தைச் செலுத்தி ஒவ்வொரு நாளும் மரணத்தைப் பற்றியே நினைவுடையவனா யிருந்தால் அகன்ற இப்புவி முழுவதும் மனிதர் எரியுண்பதற்கும் புதையுண்பதற்கும் ஆக்கப்பட்ட

பெரிய சுடுகாடாகத் தோன்றும். ஆனால், ஞாலத்தி லொவ்வொரு நாளும் பிறக்குங் குழந்தைகளைக் கணக்கெடுப்பதில் ஒருவன் தன் மனத்தைப் புகுத்தினால் இக்குழவிக ளெல்லாம் வளர்ந்து வாழ்ந்து பெருகுவதற்கு இவ்வையக மிடந்தருமோவென அவன் மயங்குவான். இங்ஙனமே, முற்காலத்து மிகுந்திருந்த நன்மைகள் சிலவற்றையே இரவும் பகலும் எண்ணிக்கொண் டிருப்பவர்க்கு நாம் இருக்கு மிக்காலம் பசும்புல் முளையாத பாழ் நிலமாகத் தோன்றும். கடலி லொவ்வொரு நாளும் பிடிக்கப்படும் மீன்களின் தொகையை ஊன்றி நோக்கினால் சமுத்திரஞ் சிறிது நாளில் மீனற்றுப் போகுமென்ற நினைவு ஒருவேளை தோன்றும்; ஆனால், ஒரு சிறு மச்சம் இடும் முட்டைகளின் தொகையைக் கருதினால் மீன்கள் பெருகுவதற்கு நெடிய ஆழியும் இடங் குன்றிப்போகு மென்றெண்ண நேரிடும். உண்மை இங்ஙனமிருக்க நல்லொழுக்கமும் கல்வியுமுடைய சிலர் இறந்த நாட்களை நினைத்துக் கவர்ச்சியுற்றுப் பின்வருமாறு இரங்கா நிற்பர்:—"பண்டைநாள் மக்கள் ஞானமுங் கல்வியும் நிறைந்தோராய்த் தானமுந் தவமுஞ் செய்து இம்மை மறுமைப் பயன்களை இனிது நுகர்ந்தனர்; இந்நாள் மனிதர் அறிவு தோன்றியது தொடங்கி உயிர்க்கிறுதி வருந்துணையும் வையகத்தின் வாழ்விலேயே மயங்கிக் கிடந்து, இன்னல் பல வியற்றி இடையூறுற்று, அல்லும் பகலும் ஐம்புலன்களின் வழியே உளத்தைச் செலவிட்டு, வினைக்கடிமைகளாகி வீணாள் போக்கா நின்றனர். முத்து மணியும் பொன்னும் பிறர்க்கீத்துவந்த செல்வரெங்கே? வளங்குன்றா நிலமெங்கே? பொய்யாவான மெங்கே? அற்றைக்கு மிற்றைக்கு மித்தனை வேற்றுமை ஏன்?" இங்ஙன மிரங்கா நிற்பவர் கூற்று உணரற்பாலது.

(தொடரும்)

க. ப. சந்தோஷம். பி. ஏ., எல். டி

# திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கப் பரீட்சைகள்

இச்சங்கத்தாரால் நாளிது இரக்தாட்சி வருடம் மார்கழி மாதம் எ௨ (21-12-24) ஞாயிற்றுக் கிழமை திருநெல்வேலிக் கீழைரத வீதியில் திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகக் கட்டடத்தில் கீழ்கண்ட முறைப்படி பரீட்சைகள் நடத்தப்படும்.

## ஆடவருக்கு

### (க) திருக்குறட் பரீட்சை

(அ) திருக்குறள் அறத்துப்பால் மூலமும் பாயிர முட்பட இல்லறவியல் பரிமேலழகருரையும்.

(ஆ) திருக்குறள் அறத்துப்பால் பொருட் பால்கள் பரிமேலழக ருரையுடன்.

### (உ) திருமுறைப் பரீட்சை

(அ) அகத்தியர் தேவாரத்திரட்டு முதல் 8-பதிகங்களும் திருநெல்வேலி, திருக்குற்றாலம், திருக்குறும்பலாப் பதிகங்களும்.

(ஆ) அகத்தியர் தேவாரத்திரட்டு முதல் ௧௬-பதிகங்களும் திருநெல்வேலிப் பதிகம் முதலிய மேற்குறித்த மூன்று பதிகங்களும்.

(இ) அகத்தியர் தேவாரத்திரட்டு முழுவதும், திருநெல்வேலிப் பதிகம் முதலிய மேற்குறித்த மூன்று பதிகங்களும்.

## பெண்டிருக்கும் கரு வயதுக்குட்பட்ட சிறுவர்களுக்கும்

### திருக்குறட் பரீட்சை

(அ) திருக்குறள் முதற்பத்து அதிகாரங்கள் மூலமும் உரையும்.

(ஆ) இல்லறவியல் மூலமும், முதற் பத்து அதிகாரங்கள் உரையும்.

வியாசப் பரீட்சை

சைவசித்தாந்த முறைப்படி முப்பொருள்களின் அநாதி நித்தியத் தன்மையை விவரித்தல்.

இப்பரீட்சைகள் அனைத்தும் எழுத்துவாயிலாக நடைபெறும். திருக்குறட் பரீட்சை இரண்டனுள் முதலாவதில் மூலபாடப்பகுதியில் முதனினைப்பேனும், வெளிப்படையாகத் தெரியவரும் கருத்தினையேனுங் கொடுத்துத் திருக்குறளைக் கேட்டலும், உரைப்பகுதியில் பதவுரை, விசேடவுரை, இன்றியமையா இலக்கணக்குறிப்பு முதலியன கேட்டலும் நடைபெறும். இரண்டாவதில் பதவுரை, விசேடவுரை, அதன் விளக்கம், இலக்கணக் குறிப்பு, அதன் விளக்கம் என்பன கேட்கப்படும்

திருமுறைப் பரீட்சைகள் மூன்றிலும் வெளிப்படையாகத் தெரியவரும் புராண சரித்திரங்கள், இயற்கை வருணனைகள், சிவபெருமானது திருவருட் கோலங்களாகிய இவற்றைச்சொல்லியும் முதனினைப்புக் கொடுத்தும் பாசுரங்களைப் பிழையின்றி எழுதச்செய்தல் நடைபெறும்.

பெண்களுக்கும் சிறுவர்களுக்கும் மூலபாடப் பகுதியில் முதனினைப்பேனும் வெளிப்படையாகத் தெரியவரும் கருத்தினையேனுங் கொடுத்துத் திருக்குறளினைக் கேட்டலும், உரைப்பகுதியில் பதவுரை, விசேடவுரை, கருத்துரை முதலியன கேட்டலும் நடைபெறும்.

வியாசப் பரீட்சையில் குறித்த பொருளைப் பற்றித் தெளிவான எளிய தமிழ் நடையில் அரைத்தாள் வடிவு கொண்ட ௧௬ (16) பக்கங்களில் பக்கம் ஒன்றுக்கு ௩0 (30) வரிக்குக் குறையாமல் வியாசம் எழுதப்படல் வேண்டும். மேற்கோள்கள் இன்றியமையாத இடங்களில் பொருள் விளக்கத்தைக் கருதிமட்டும் எழுதப்படல் வேண்டும்.

பரீட்சையில் தேறியவர்கள் வகுப்பும் பரிசுபெற வரவேண்டியதினமும் தபால் மூலம் அறிவிக்கப்படும்.

திருக்குறட் பரீட்சையில் தேறியவர்களில் முதற் பதின் மருக்குப்பரிசுகளும், திருமுறைப் பரீட்சையில் தேறியவர்களில் முதல் மூவருக்குப் பரிசுகளும், வியாசப் பரீட்சையில் சிறந்த கட்டுரையாளர்க்குப் பரிசும் ஷை சங்க ஆண்டு நிறைவு விழாக் கூட்டத்தில் அளிக்கப்படும்.

திருக்குறட் பரீட்சைப் பிரிவுகளில் ஆடவர் பிரிவுகளுக்கு முறையே 4, 8 அணுக்களும், பெண்டிர் சிறுவர் பிரிவுகளுக்கு முறையே 2, 4, அணுக்களும் விண்ணப்பத்துடன் அனுப்பப் படல்வேண்டும். திருமுறைப் பரீட்சைப்பிரிவுகளுக்கு முறையே 8 அணு, ரூ 1, ரூ 1–8 விண்ணப்பத்துடன் அனுப்பப்படல் வேண்டும். விண்ணப்பங்கள் கார்த்திகைமீ 15உக்குள் அனுப் பப்படல் வேண்டும். விண்ணப்பப் பாரங்கள் வேண்டுவோர் தபால் தலை அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

விண்ணப்பம் பூர்த்தி செய்யப்பட்டதும் விண்ணப்பத்திற் கண்டமாணுக்கர் அப்பரீட்சைக்கு வருந் தகுதியுடைய ரென் பதற்குச் சான்ருகத் தமிழ்ப்புலமை வாய்ந்த வொருவரிடம் கை யெழுத்துப்பெற்று அவ்விண்ணப்பம் அனுப்பப்படல் வேண்டும்.

வியாசங்கள் மார்கழிமீ 10உக்குள் அனுப்பப்படல் வேண் டும். உயர்ந்த கட்டுரையாளர்க்கு ரூ 20 பெறுமான புத்தகங் கள் அளிக்கப்படும்.

குறிப்பு:—அறத்துப்பால் மூலமாத்திரம் பிழையற எழுதக் கூடியவர்களுக்கும் பரிசளிக்கப்படும். அவர்களுக்கு மேற்கண்ட மூலபாட விதிகளேயாம். கட்டணம் அணு முறையே 4, 8, ஆகும்.

இப்பரிசுப் பரீட்சைக்கு நன்கொடைப் பொருளுதவி செய் யும் அன்பர்கள் தங்களால் இயன்ற தொகையினை கீழ்க்குறித்த விலாசத்திற்கு அனுப்பும்படி கேட்டுக்கொள்ளுகிறோம்.

அமைச்சர்கள்,

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிட்டெட்,

கீழரதவீதி, திருநெல்வேலி.